Kumarakuruparaṉ

Malar 6, itaḻ 2

Māci 1955

[February / March 1955]

Record no. 308

# ஆசிரியர் குழு

1. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A., B. O. L.
பிரின்ஸ்பால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

2. திரு. கே. சிவராமன் அவர்கள், M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்
காசிச் சர்வகலாசாலை, காசி.

3. ராவ்சாஹிப், வித்வான். திரு. கு. அருணசலக் கவுண்டர் அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி.

4. திரு. ஆ. சி. ஷண்முகநயினர் பிள்ளை அவர்கள், B. A., B. L.
வழக்கறிஞர், தென்காசி.

5. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A. L. T.
இறைபணியாளர், ஸ்ரீமீனுக்ஷிசுந்தரேசுவரர் தேவஸ்தானம், மதுரை.

6. திரு. ம. ரா. சண்முகசுந்தரம் பிள்ளை அவர்கள் B. A. B. L.,
இந்து சமய அறநிலைய உதவி ஆணையாளர், திருநெல்வேலி.

**T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,**
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை





ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வரலாற்றுப் படங்கள்

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 6 | 1955-ஆ மாசித் திங்கள் | இதழ் 2

# சிதம்பர மும்மணிக் கோவை

தருமபுராதீனப்புலவர், சித்தாந்தரத்நாகரம், வித்துவான்,
திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்,
துணைத்தலைவர், ஓரியண்டல் காலேஜ், தருமபுரம்.

( கட்டுரை 21 )



புண்ணியத்துக்கும் பாவத்துக்கும் உள்ள ஒளிவேறுபாட்டையும் நம் முன்னோர் உணர்ந்து உணர்த்தியிருக்கின்றனர். கீர்த்திக்கும் பிரதாபத்திற்கும் நிறம் கண்டு காட்டியிருக்கின்றனர். இக்கால விஞ்ஞானத்தால் எஞ்ஞான்றும் காண்டற்கு அரிய நுண்பொருள்களை யெல்லாம் மெய்ஞ்ஞான நோக்கால் அறிந்து அவற்றின் திறங்களைத் தெளிவாக்கினர் நம் பண்டைச் சான்றோர். 'பனிமால்வரைப் பாலதாகிய கயிலைத் திருமாமலை, அண்ணல் வீற்றிருக்கப் பெற்றது ஆதலின், மூன்று உலகும் நான்மறைகளும், எண்ணில்(லாத) மாதவம் செய்ய வந்து எய்திய புண்ணியம்

(அனைத்தும் ஒருசேரத்) திரண்டுள்ளது போல்வது' என்று புண்ணியத்தின் வெண்ணிறத்தைக் குறித்தருளினர் அருண் மொழித்தேவநாயனர். இது கயிலை மலையினது வெண்மைக்கு ஒப்புணர்த்திய இடம்.

வானகத்தில் நிலாவொளி இல்லாத காலத்தில் இருளுக்குத் தானே தனியரசு? அதற்குத் தக்க உவமைகளை யெல்லாம் ஒரே வரிசையாக ஓராயிரத்தின் மேலும் உரைத்தருளும் திருவருள் வலிமை நம் பாக்கியப் பயனுகிய சேக்கிழாரக்கு உண்டு. உண்டெனினும், நாற்சீரும் நாலடியும் என்ற வரையறைக்குக் கட்டுப்பட்டால் எத்தனை உரைக்கலாம்? நாலடிக்கு நான்குகொண்டாலும் உவமேயத்துக்கு இடம் இல்லாமல் போய்விடும் அன்றே? அதனல், அச்சிறுபாட்டில் பெரும்பகுதி என்ன, அமைந்த மூன்று உவமைகளுள் ஒன்று பாவம். அது 'வல்வினை' எனக் கூறப்பட்டது. அதற்கு உரிமையாளர் (உடையோர்–சொந்தக்காரர்) மக்கள் அல்லர் மாக்களே. அவருள்ளும் வலிய நெஞ்சுடையவர்.

தண்ணிய (குளிர்ந்த)நெஞ்சுடையவர் தஞ்சமே (தண்மையே) புரிவர். (தஞ்சம், தண்+து+அம்). வலிய நெஞ்சுடையவர் கடுமை (வெம்மை)யே செய்வர். (வல்+து+அம்=வஞ்சம் என மருவிற்று.) கம்பர், தஞ்சமும் வஞ்சமும், தருமமும் பாவமும், தகவும் பொய்யும் என்று இணைத்து, நல்லவை மூன்றும் இராமராதியரிடத்திலும், தீயவைமூன்றும் இராவணனுதியோரிடத்திலும் இருப்பன என்றார். அது கும்பகருணன் கூற்றுக அமைந்திருக்கின்ற இடம். அங்குத் தஞ்சத்திற்கு வஞ்சம் மறுதலையாக அமைந்திருப்பது அறியத்தக்கது. 'தஞ்சம்' தண்மையை அடியாக்கொண்டு தோன்றிய சொல். 'வஞ்சம்' வன்மையை முதலாக்கொண்டு முளைத்த மொழி. தஞ்சமுள்ள நெஞ்சில் வஞ்சம் இராது. வஞ்சம் இருக்கும் நெஞ்சில் தஞ்சம் இராது. இரண்டும் மாறி மாறி வரும் நெஞ்சைப் பற்றி இங்கு ஆராய்ச்சி வேண்டா. தஞ்சம் உள்ள இடத்தில் தருமமும் சத்தியமும் தாமே அமையும். வஞ்சம் உள்ள இடத்தில் அதருமமும் அசத்தியமும் இயல்பாக இருக்கும். இவ்வுண்மையைக் கும்பகருணன் கூறினன் ஆயின், அவனது 'மதிநுட்பம்' தனித்ததோ? நூலொடு கூடியதோ? ஆய்மின் அறிஞரே!.



'தஞ்சமும் தருமமும் தகவுமே அவர்
நெஞ்சமும் கருமமும் உரையுமே'

என்று இராமராதியர் மனம், காயம், வாக்கு மூன்றன் நிலைமை குறிக்கப்பட்டது காண்க.

'நெடு. வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்லநாம்
உஞ்சுமோ அதற்கொரு குறைஉண் டாகுமோ'

என்று தம் இனத்தவர்க்குள்ள அத்திரிகரணங்களின் நிலைமையை மறைக்காமல் உரைத்த வாய்மையும் நோக்குக.

கம்பர்க்குச் சேக்கிழார் எத்தனையோ வகையில் உயரிய அருட்கவிச் சக்கிரவர்த்தி அல்லரோ? அதனல், 'வஞ்சமாக்கள் தம் வல்வினை' என்று, வல்வினைக்கு இடம் வஞ்சம் உள்ள நெஞ்சு என்றும், அதை உடையோர் மக்கள் ஆகார்; மாக்களே என்றும், அவர்க்கு உடைமை 'வஞ்சம்' அன்றி வேறு இல்லை என்றும், அவ்வுடைமையின் அநுபவப்பயன் இருளில் இருந்து வருந்துவதே என்றும் குறிப்பிற் பெறப்புலப்படுத்தி அருளினர்.

அம்மாக்கள் நெஞ்சம் வஞ்சம் நீங்கி, இருள் இரிந்து, அருள் பொருந்த வேண்டின் நீக்கம் ஒன்றும் ஆக்கம் ஒன்றும் அடைதல் வேண்டும். வஞ்சநெஞ்சிருள் எதனல் வளரும்? பஞ்சின் மெல்லடிப் பாவையர் உள்ளத் தொடர்பு கொண்டால் வளரும். அது நீங்க எது துணையாக உதவும்? பரன் அஞ்செழுத்து. இருண்ட இடங்கள் நான்கு எவை? 1. பஞ்சின் மெல்லடிப் பாவையர் நெஞ்சம். 2. வஞ்சமாக்கள் நெஞ்ச வல்வினை. 3. பரன் அஞ்செழுத்தும் உணராதாராகிய அறிவிலோர் நெஞ்சம். 4. நிலவொளியில்லாத நீண்ட வானம். இஃது உவமேயம். அந்நான்கனுள், பாவையருள்ளம் வல்வினையாகிய இருளை வளர்க்கும். அதனை நீக்கவேண்டும். அவ்விருளானது பரன் அஞ்செழுத்தை உணர்ந்தால் வேரொடு விலகியோடி ஒழியும். அதனை ஓதிஉணர வேண்டும். சிவஞான வொளி ஓங்கித் திகழும்.

அந்த வல்வினை (பாவத்து)க்கு இருள் ஒப்பானது என்றதால் அதன் கருமை நிறம் புலப்படும். படவே, சேக்கிழார்

பெருமானுர், புண்ணியத்தின் வெண்ணிறத்தையும் பாவத்தின் கருநிறத்தையும் இருவேறிடத்தில், அறிவித்தருளிய உண்மை இனிது விளங்கியதாயிற்று. தமிழிலுள்ள பாவகைகட்கும் நிறம் உணர்ந்து குறித்தனர் நம் சான்றேர்.

அத்தகு பெருமைகளுள் தலைசிறந்தது எது? சிவஞானத்தின் ஒளியைக் கண்டுணர்ந்தது. நடராசப்பிரான் திருக்கூத்து எது? உடற்கூத்தா? உயிர்க்கூத்தா? உணர்வுக்கூத்தா? இன்பக்கூத்தா? உடற்கூத்தும் அன்று, உயிர்க்கூத்தும் அன்று. உணர்வுக்கூத்தே இன்பக்கூத்தே ஆகும். 'உரனுறு திருக்கூத்து' (ஏயர்கோன். 114) என்றதும், 'ஞானமே யான அம்பலம்' 'ஆநந்தவொரு பெருந்தனிக்கூத்து' (திருஞான. 160) என்றதும், 'குணம் கடந்த தனிக்கூத்து' (1139) 'மெய்யுணர்வின்கண்வரும் ஆநந்தக்கூத்து' (திருமூலர். 7) என்றதும் அறிதற்பாலன. 'ஆவியுள் நின்று அருள செய்ய வல்ல அழகர்' (திருஞானசம்பந்தர் திருப்பதிகம் 361 பா. 10) 'ஆவியுள் நீங்கலன்' (ஷை 363 - 3) என்று அருளியவற்றை நோக்கின் அஃது உணர்வுக்கூத்தே என்பது தெளிவாகும். ஆவி (உயிர்)க்கூத்தாயின், 'ஆவியுள்' எனல் பொருந்துமோ? அக்கூத்து ஞானக்கூத்து. ஆநந்தக் கூத்து. ஆடுவதும் ஆநந்தம். ஆடும் இடமும் ஆநந்தம். இரண்டும் ஞான மயம். ஆநந்த மயம். அங்கு அந்த ஞானத்தின் ஒளியையும் ஆநந்த வொளியையும் இன்னவென்று யாராலும் உரையால் உணர்த்தல் முடியாது. அதனுல், ஒளிகளுட் சிறந்த பொன் ஞெளியை ஓராற்ருல் அவ்வொளிக்கு ஒப்புக்காட்டி அதுகொண்டு மதிநுட்பத்தால் உய்த்துணர்ந்து கொள்ளவேண்டி வகுத்த மன்றத்தைப் பொன்ஞல் வேய்ந்தனர் புண்ணியச் சான்றேர்.

அப்பொன்மன்றம், வடமேருமலையே வாய் பிளந்து தோற்றம் தந்தால் எவ்வளவு ஒளியொடு நிற்கும்? அவ்வளவு ஒளியொடு நிற்கின்றது. அதைக் கருத்தால் எட்டிப் பிடித்தார் நம் குமரகுருபர முனிவரர். அதையே தம் அருளுரையால் உரைத் தருளினர்.

'வடதிசைக் குன்றம் வாய் பிளந்தன்ன
கடவுள் மன்று'



இதுவே அத்தொடர். கடவுள் மன்றம் தில்லைச் சிதம்பரத்தில் உள்ள கனகசபை. அது கண்ணுக்குத் தோன்றும் ஒளி உடையது. கருத்துக்கும் எட்டாத் ஞானசபை (சிற்சபை)க்கு உரியது அழியாத பேரொளி. அதற்கு ஒப்பும் இல்லை உயர்வும் இல்லை. நமக்கு வடதிசையிலுள்ள மேரு (பொன்) மலைவாய் பிளந்தாற் போன்ற பொன்ஞெளி உடையது தில்லையெல்லையி லுள்ள மன்றம். எல்லா வுலகங்களிலும் நிறைந்து, அவற்றுக்கு அப்பாற்பட்ட எல்லையிலும் தூயதாய் முழுதாய் நிற்கும் அகண்டாகார வெளியைக் குறிக்கும் ஒரு குறியே அம்மன்றம். அம்மன்றத்தில் வாழ்கின்றதால்தான் அக்கடவுளை 'மன்றவாணன்' என்று சைவாசாரியர் கூறினர். மன்றவாணனை மனத்திடை நிறுவி என்றது இருவகை மன்றத்தையும் குறித்தது.

'அண்டவாணன் என்பார்க்கு அடையா அல்லல்தானே' (2. 49. 10.) என்ற கழுமலத்திறைவர் அருளிய மொழியால், அண்டத்தில் வாழ்நன் சிவபெருமான் என்பது விளங்கும். அவரே அண்டவாணர் தொழும் ஆமாத்தூர் அம்மானே' என்றதில் அத் தொடர்க்குரிய பொருளாகத் தேவரைக் குறித்தருளினர். தேவர் வாழும் அண்டம் வேறு சிவபெருமான் வாழும் அண்டம் வேறு. தேவர் வாழும் அது விண் வான் முதலிய பெயராலும் குறிக்கப் படும். அப்பெயர்களால் சிவஞான வெளியும் குறிக்கப்படு கின்றது. 'எல்லாம் கழன்ற இடம்' என்றதும் அதுவே. அதற்கு ஒரு நினைவுக் குறியே தில்லை(ச்சிதம்பரம் ஆகிய) மன்றம்.

அம்மன்றத்தில் ஆடும் திருக்கூத்தைக்கண்டு தொழுவார்க்கு வரும் பயன் அளவில்லாதது. தவவேடத்தைத் தாங்குதல் உடம்பின் வெளியே, அத்தவக்கோலத்திற்கு மாறுன வஞ்சக ஒழுக்கத்தைப் பொதிதல் உள்ளத்தின் உள்ளே. தாங்குவதை விரைவில் தவிர்க்கலாம். பொதிவதை விரைந்து போக்கல் அரிது. அவ்வாறு முரண்பட்ட இரண்டும் உடையோர்க்கும் நடராச தரிசனம் வாய்த்துவிட்டால், உய்யும் வழி கிடைப்பதில் ஐயம் இல்லை. அவ்வுய்தியைப் பெற ஒரு தவமும் செய்ய வேண்டா. சிறு தவமும் வேண்டா என்ருல் பெருந்தவத்தில் எண்ணம்

ஏகுமோ? எத்தவமும் இல்லாதார்க்கு உய்யும் ஆறு எப்படிக் கிடைத்தது? இக்கேள்வி தானே எழும்.

பொய்த்தவக் கோலம் பூண்டு, மெய்த்தவத் தொண்டரொடு இடைவிடாமல் பயின்ற செயல் அப்பெரிய நலத்தை விளைத்தது. மெய்த்தவத் தொண்டர்க்கு இயல்பு, தம்மைப் போன்ற தொண்டரிடத்தில் சிவபெருமானைப் பாவிப்பது.

'தாவரிய அன்பினுல் சம்புவினை எவ்விடத்தும்
யாவர்களும் அர்ச்சிக்கும் படிகண்டால் இனிதுவந்து
பாவனையால் நோக்கினுல் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய அன்பினுல் மேலவர்க்கும் மேலானுர்'

(பத்தராய்ப்பணிவார். 2)

'எவரேனும் தாமாக விலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி, உவராதே அவரவரைக் கண்டபோது உகந்து அடிமைத்திறம் நினைந்து, அங்கு உவந்து நோக்கி, இவர் தேவர் அவர் தேவர் என்று சொல்லி இரண்டு ஆட்டா தொழிந்து ஈசன் திறமே பேணிக், கவராதே தொழும் அடியார் நெஞ்சின் உள்ளே கன்றுப்பூர் நடுதறியைக் காணலாமே' என்ற திருமுறை வசனங்களால், மெய்த் தொண்டர்க்கு இன்றியமையாத அச் சிவபாவனையை நன்முக அறியலாம்.

அத்தகைய பாவனையைப் பொய்த் தொண்டரிடத்திலும் மெய்த்தொண்டர் செய்து வருகின்றனர். அவரது பாவனுபலம் (நோக்கின் வன்மை) முற்றுப் பெற்று அப்படியே பலிக்கின்றது. அங்ஙனம் பலித்த உண்மையநுபவம் நம் குமரகுருபர முனிவர்க்கு இருந்துணர்த்தியதோ, பிறரிடம் உள்ளதை உணர்த்த உணர்த்தியதோ இத்திருவகவலில், அழகுற நிற்பதை யாவரும் அறிந்து பயன்பெறலாம்.

அதன் முடிந்த உண்மையாவது யாது? சிவபெருமானை எவ்விடத்தில் மெய்த்தொண்டர் பாவனை செய்வர்? அவ்விடத் தெல்லாம் அம் முழுமுதற் பொருள் வீற்றிருந்தருள்வன். இதிற் சிறிதும் ஐயம் இல்லை. அதனுல், பொய்த்தொண்டரும் மெய்த் தொண்டரிணக்கம் பெற்றுல், கிடைத்தற்கு அரிய பேரின்பம் கிடைக்கப் பெறுவர் என்பது தெளிவுறும்.



"செய்தவ வேடம் மெய்யில் தாங்கிக்
கைதவ ஒழுக்கம் உள்வைத்துப் பொதிந்தும்
வடதிசைக் குன்றம் வாய்பிளந் தன்ன
கடவுள் மன்றில் திருநடம் கும்பிட்டு
உய்வது கிடைத்தனன் யானே. உய்தற்கு
ஒருபெருந் தவமும் உளுற்றிலன். உளுற்றுது
எளிதினில் பெற்றது என்எனக் கிளப்பின்,
கூடா வொழுக்கம் பூண்டும் வேடம்
கொண்டதற்கு ஏற்பநின் தொண்டரொடு பயில்தலின்
பூண்டஅவ் வேடம் காண்தொறும் காண்தொறும்
நின்நிலை என்னிடத்து உன்னி உன்னிப்
பல்நாள் நோக்கினர். ஆகலின் அன்னவர்
பாவனை முற்றி,அப் பாகவப் பயனின்,யான்
மேவரப் பெற்றனன் போலும். ஆகலின்,
எவ்விடத்து அவர்உனை எண்ணினர்? நீயும்மற்று
அவ்விடத்து உளைஎனற்கு ஐயம்வேறு இன்றே.
அதனுல்,
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ...
பரமானந்தக் கூத்த கருணையொடு
நிலையில் பொருளும் நிலையியற் பொருளும்
உலையா மரபின் உளம்கொளப் படுத்திப்
புல்லறிவு அகற்றி நல்லறிவு கொளீஇ
எம்அனோரையும் இடித்துவரை நிறுத்திச்
செம்மைசெய் தருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க்கு உண்டோ பெறத்தகா தனவே."

என்று, இங்கு, முன் அறிந்த பகுதியுடன் ஒருசேரவைத்து, முழுக் கருத்தையும் உணர்ந்து கொள்க. இதில் பிற்பகுதியில் உள்ள அடிகள் எட்டும் சென்ற திங்களிதழில் கற்றதே ஆயினும், பொருட்பொருத்தமும் கருத்துத் தொடர்பும் விளங்கும் பயனை நோக்கி, மீண்டும் எழுதப்பட்டன. இது கூறியது கூறல் என்னும் குற்றத்தின்பாற்படாது.

(தொடரும்)

பெரியபுராண கல்வெட்டு

# மநுசரிதக் கல்லெழுத்து

## (ஆராய்ச்சிக் குறிப்பு)

வித்துவான். திரு. K. M. வேங்கடராமையா அவர்கள், M. A., B. O. L.
பனசை.



சுவஸ்தி ஸ்ரீ பூமாலை இடைந்து பொன் மாலை திகழப்பாமாலை மலிந்த பருமணித்திரள் புயத்திருமலை மடந்தையொடு ஜயமகளிருப்ப – வேதமும் மெய்மையும் ஆதியகம்போலத் தலைத்தலை சிறப்ப வந்தருளி வெலற்கரும் போர்புல ஆணை பார்த்திபர் சூட மண்முழுதுங்களிப்ப மநுநெறி வளர்த்து தன்கோயில் கொற்ற வாயிற்புறத்து மணிநா வொடுங்க – திரிபுவனமுடையானிவன் திருவுளத்தருள் முழுதுடையா னென உடனிருப்பச் செம்பொன் வீரசிம்மாசனத்துச் சேக்கிழானடிக ளோடும் எழுந்தருளிய கோப்பரகேசரி வர்மனான திரிபுவன சக்கர வர்த்திகள் ஸ்ரீ விக்கிரமசோழ தேவர்க்கு யாண்டு ஐஞ்சாவது மிதுன ஞாயிற்று பூர்வ பட்சத்து சப்தமியும் ஞாயிற்றுக்கிழமையும் அத்தமு மான நாள் 340 கெயாமாணிக்க வளநாட்டுத் திருவாரூர்க் கூற்றத்துத் திருவாரூர் உடையார் வீதி விடங்கர் சித்திரைத்திங்கள் திருநாளில் சதைய......... திருக்காவணத்தில் சிம்மாசனத்து எழுந்தருளியிருந்து பதியிலாளர் தியாகவிநோத்........... கண்டருளாநிற்ப ஸ்ரீ காரியம் சுப்பிரமங்கல முடையான் மாதவன் இரவியான மாணிலைய மூவேந்த வேளார் விண்ணப்பத்தினால் பதிபாத மூலபட்டுடை பஞ்சாசாரிய தேவகன்மிகளுக்கும் கோயிலங்......... பார்க்கும் திருவாய் மொழிந் தருளியபடி நம் ஏவலால் பூலோக ராஜ்யம் செய்கிற சூர்யபுத்திரன் மநு தன் புத்திரன் ஏறிவருகிற தேரில் பசுவின் கன்றகப்பட்டு பிரமாதப்பட அதின் மாதாவான சுரபி கண்டு துக்கித்து, மநுவின் வாசலில் மணியையெறிய, அதுகேட்டு, மநு தன் மந்திரி இங்கணுட்டுப் பாலையூருடையான் உபயகுலாமலனைப் பார்த்து நீ சென்று இதனை அறிந்து... வாயிற் புறத்து ஒரு பசு மணி எறியா நின்றது என்று சொல்ல, அதுகேட்டு, மநு புறப்பட்டு; பசுவையும் பட்டுக்கிடந்த......படிவினவி தன்புத்திரன் பிரிய விருத்தனைத் தேரிலே ஊர்ந்து, குறுக்கவென்று உபய குலாமனுக்குச்சொல்ல அவன் சந்தாயத்தோடும் புறப்பட்டுத் தன் செவிகளைத் தரையிலே குடைந்துகொண்டு துக்கித்தனுய், மநு தானே புறப்பட்டு, தன் புத்திரனைத் தானே தேரிலே ஊர்ந்து குடுக்க, அப்போதே நாம் அவனை அநுக்கிரகித்து கன்றுக்கும், மந்திரிக்கும். மநு புத்திர னுக்கும் ஜீவன் குடுக்க, அதுகண்டு மநு சந்தோஷித்துக் கன்றினை



எடுத்துக்கொண்டு, பசுவுக்கு காட்டிகுடு......... அபிஷேகம் பண்ணி இவனுக்குத் தன் புத்திரன் மாளிகை.........மங்கல......மூரும் கு...த்து மநுவும் உபய குலாமலனும் தபசினைத் தலைநின்றமையால், பாலையூர் உடையான் உபயகுலாமலன் வம்சத்தனாகிய பாலையூர் உடையார் சந்திரசேகரனாதி விடங்கனான குலோத்துங்க சோழமகாபலிவாண... ......வம்சாதியாக வருகிற மாளிகை மனை பழயபடி மாளிகை ஆக எடுத்துக் குடி வைப்பதாக நாம் சொல்ல...... இதிலே நித்தமும் நாம் அடியார்க்குச் சோறு இடப்பெற வேணுமென்று இவன் நமக்குச் சொன்னமையில் காட்டிப்பெறுவதாகவும் இம்மாளிகை வம்சாதி அகஸ்வமாய்வரு......மாளிகையிலே எழுத்து வெட்டிவித்துக் கொடுக்க வென்று......... பாலையூருடைய உபயகுலாமலன் மநுவின் பக்கல் பெற்றுடைய மாளிகை மனை தனக்கும்......... நாம் காணியாகத் தந்தோம். இம்மாளிகை பழப....... ...மனை நிலத்துக்குக் கீழ்பாற் கெல்லை தூது............ முடுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை........... வடக்கும் மேற்பாற்கெல்லை அருமொழிஸ்வரமுடையார் கனிச்சேரி பால்நத்தத்துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை பாலையூருடையான் மாளிகைத் தெருவுக்குத் தெற்கும் இவ்விசைந்த பெருநான்கு எல்லை நடுவுட்பட்ட மாளிகை மனை குழி நூற்றிருபதும், இப்பாலை யூருடையான் சந்திரசேகரனாதி விடங்கனான குலோத்துங்க சோழ மகாபலிவாண ராஜனுக்கு வம்ஸாதியாக ஸ்வமானபடி ஸ்ரீ காமேஸ்வர ருக்கும் பதிபாத மூலபட்டுடை பஞ்சாசாரிய தேவ கன்மிகளுக்கும்... .........ர்க்கும் உடையார் வீதி விடங்கதேவர் திருவாய்மொழி......... கல்வெட்டியது இது. பலமாகேஸ்வர...........

---

## ஆராய்ச்சிக் குறிப்பு



### பண்டை நூல் கூற்றுக்கள்

பெரிய புராணத்தில் மனுசரிதம் திருவாரூர்ச் சிறப்பு என்ற பகுதியில் விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. இவ்வரலாறு

"வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்"

என்று சிலப்பதிகாரத்திலும்,

"மகனை முறை செய்த மன்னவன்" என்று மணிமேகலையிலும் "மேலைக் கறவைக் கன்றூர்ந்தானைத் தந்தையுமூர்ந்தான்" என்று பழமொழியிலும் குறிக்கப்பெற்றுள்ளது.

**மகாவம்சம் கூறுவது**

கி. மு. இரண்டாம் நூற்றூண்டின் இடைப்பகுதியில் சோழ நாட்டில் ஏழாரன் என்னும் அரசன் இருந்தான். அவன் பகைவர்க்கும் நண்பர்க்கும் ஒரே நிலையில் நீதி வழங்கினான்; தன் மகன் தேர் ஊர்ந்து சென்று அறியாது பசுக்கன்றைக் கொன்றதற்காக, அத்தனி மகனைக் கிடத்தி, அவன்மீது தானே தேர் ஊர்ந்து கொன்ற உத்தமன்.* இவ்வரசன் அக்காலத்தில் இலங்கையை ஆண்ட அசேலன் என்பவனை வென்றான் என்றும் மகாவம்சத்தினின்று அறிகின்றோம். இலங்கை வரலாற்றைக் கூறும் நூலாகிய மகா வம்சத்தில் இச்செய்தி கூறப்படுவது அறியத்தக்கது.

**மனுசரிதக் கல்லெழுத்து†**

இக்கல்லெழுத்து திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி திருக்கோயில் இரண்டாம் பிராகாரம் வடபுறச் சுவரில் உள்ளது. மனுவேந்தன் மந்திரியான உபயகுலாமலன் வம்சத்தனை பாலையூருடையான் சந்திரசேகரன் ஆதிவிடங்கனை குலோத்துங்க சோழ மகாபலிவாணராயனுக்கு 120 குழி மனையும் மாளிகையும் பாலையூரில் தரப்பெற்றதை இக்கல்லெழுத்து விவரிக்கிறது. இது கி. பி. 1118 முதல் 1136 வரை அரசாண்ட விக்கிரமசோழரின் 5-வது ஆட்சியாண்டில் அளிக்கப்பெற்ற சாசனம் ஆகும். (விக்கிரம சோழர் முதற் குலோத்துங்க சோழரது மகன் ஆவர்)

* சோழர் வரலாறு – Dr. மா. இராசமாணிக்கம் – முதற்பாகம் – பக்கம் 40

† தருமபுர ஆதீனம் 25-வது மகாசன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுளப் பாங்கின்படி திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் எழுதிய திருவாரூர் என்ற நூலில் பக்கம் 105–107ல்



**இச்சாஸனத்தினின்று அறிவன**

மனு திருவாரூரில் இருந்து அரசு புரிந்தவர் என்றும், மனுவின் மந்திரியின் பெயர் இங்கணுட்டுப் பாலையூருடையான் உபயகுலாமலன் என்றும், மனுவின் மகன் பெயர் பிரியவிருத்தன் என்றும், மனுவின் மந்திரி வம்சத்தவன் – விக்கிரம சோழன் காலத்தில் இருந்தவன் – பாலையூர் உடையார் சந்திரசேகரன் ஆதிவிடங்கனை குலோத்துங்க சோழ மகாபலிவாணராயர் என்பவர் ஆவர் என்றும் இக்கல்லெழுத்துப் பகுதியினின்று அறிகிறோம்.

**கன்றிழந்த பசுவின்சிற்பம்**

திருவாரூர்த் திருக்கோயிலில் இவ்வரலாற்றை நினைவுப் படுத்தும் சிற்பம் இருக்கின்றது. ஒரு கற்றேர், பசு, கன்று; கன்றையிழந்த பசு கீழ் நோக்கிய பார்வையுடையது; அப்பார்வை கவலைக்குறியுடையது. இச்சிற்பமும் இச்சரிதத்தை நினைவுறுத்தும் சாதனங்களில் ஒன்று.

**மனுநீதிச் சோழர் நினைவுப் பசுப்பரிசு**

இங்ஙனம் மகாவம்சத்திலும், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற பழந்தமிழ் நூல்களிலும், சோழர் கல்லெழுத்திலும், திருவாரூர்த் திருக்கோயிற் சிற்பத்திலும், பெரிய புராணத்திலும் விளக்கம் பெறும் மனுநீதிச் சோழர் வரலாற்றை நினைவு கூர்ந்து மக்கள் பசுக்களைப் போற்றி ஆபயன் வளர்த்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ரூ. 3500/- மூலத்தில் *பசுப்பரிசுகளை நிறுவியுள்ளார்கள். திருவாரூரில் பசுக்களை வளர்ப்பவர் இதனை யறிந்து, பயன்பெறுவாராக.

ஆரூர் அமர்ந்த அரசே போற்றி!

* 1. திருவாரூரில் மனுநீதிச் சோழர் நினைவுப் பசுப்பரிசு நிதி திருவாரூர் நகர மன்றப் பரிபாலனத்தில் நடைபெறும். 2. இங்ஙனமே மதுரையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பசு பரிசுநிதி, மதுரை நகர மன்றப் பரிபாலனத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அளித்துள்ளார்கள். 3. காஞ்சிபுரத்தில் ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியார் நினைவில் பசுப்பரிசு நிதிக் கட்டளை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவுவதற்கு ஏற்பாடாகி யுள்ளது.

க்கு௱உ

# "கற்ருேரும் மற்ருேரும்"

வித்துவான் திரு. கே. எம். கிருஷ்ணமூர்த்தி அவர்கள், பனசை.

**முன்னுரை :-**

உடம்புக்கு இரண்டு கண்களை ஆண்டவன் படைத்திருக்கிருன்;- மக்களுக்கு மட்டுமல்ல; மாக்களுக்குந்தான். ஆனல் மக்கள் மேலும் இரண்டு கண்களை வளர்க்கிருர்கள்; மாக்கள் வளர்ப்பதில்லை. அப்படி வளர்க்கின்ற கண்களை, "எண்ணும் எழுத்தும் கண் எனத்தகும்" என ஔவையாரும், "எண் என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண் என்ப வாழும் உயிர்க்கு" என வள்ளுவரும் குறிப்பிட்டுள்ளார்கள்.

**மக்களும் மாக்களும்**

எனவே, மக்கள் மாக்களிடமிருந்து (மிருகங்களிடமிருந்து) உயர்வாக மதிக்கப்பட வேண்டுமானல் கல்விச் சிறப்பு உடையவராக வேண்டும். இது கருதித்தான் "விலங்கொடு மக்கள் அனையர், இலங்குநூல் கற்ருரோடு ஏனையவர்" என்ருர் வள்ளுவர். கற்றவர் தாம் மக்கள் எனப்படுவர். கல்லாதவர் மக்களைப்போல் வடிவம் பெற்றிருப்பினும் விலங்குகளையே ஒப்பர்.

**புலவனும் அரசனும்**

கற்றுக் கைதேர்ந்து புலமை முற்றியவன் புலவன். அரச வாழ்வில் அளவற்ற செல்வாக்கு உடையவன் அரசன். இம் முறையில் இருவரும் உயர்ந்தவர்கள் என்றும், இவர்களைச் சீர்தூக்கி ஆய்கிருர் ஔவையார். மன்னனைவிட மாசறக் கற்ற புலவனே சிறப்புடையவன் என முடிவு கூறுகின்ருர். எப்படி என்று வினவினல், "மன்னனுக்குத் தன் நாட்டில்தான் மதிப்பு; ஏனை நாட்டில் மதிப்பில்லை. கற்றவனுக்கு எங்கு போனலும் சிறப்பு உண்டு" என்று தெள்ளத்தெளியப் பதில் அளிக்கிருர்.



**புலவனும் நான்முகனும்**

புலவன் கற்பனை ஊற்றில் பெருகும் கருத்தை வைத்துக்கொண்டு சொல்லோவியம் தீட்டிப் புகழ் உடம்பு படைப்பவன். நான்முகன் வனையும் ஆற்றல் கொண்டு மாயையினல் உயிருக்கு உடம்பைப் படைப்பவன். இவ்விரு தொழிலாளிகளும் செய்த சரக்கை ஆராய்கின்ருர் குமரகுருபரர். நான்முகன் செய்த உடம்பு நாளடைவில் மாய்ந்து விடுகிறது. புலவன் செய்யும் உடம்பு அழியாமல் என்றும் நிலைத்துவிடுகிறது. இதை வைத்து ஒரு முடிபும் கூறி விடுகிருர் ஸ்ரீ குமரகுருபரர். அம்முடிபு,

> "கலைமகள் வாழ்க்கை முகத்தது எனினும்
> மலரவன் வண்டமிழோர்க்கு ஒவ்வான் — மலரவன்செய்
> வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா, புகழ்கொண்டு
> மற்றிவர் செய்யும் உடம்பு" என்பதுதான்.

**உள்ளழகும் வெளி அழகும்**

கூந்தலைச் சீவி முடித்தல் ஓர் அழகு. கரையில் (ஓரத்தில்) ஜரிகை வேலைப்பாடு கொண்ட ஆடையை உடுத்துவது மற்ருேர் அழகு. முகத்துக்கு இடும் மஞ்சள் முதலிய பூச்சு வேருேர் அழகு. இவைகள் எல்லாம் வெளி அழகேயன்றி உள் அழகு ஆகமாட்டா. நெஞ்சில் நிற்கும் கல்வி அழகுதான் சிறந்த அழகு என்று நாலடியார் செய்யுள் ஒன்று நவில்கின்றது.

**படிப்பும் பணமும்**

ஈட்டி எட்டின மட்டும் பாயும்; பணம் பாதாள மட்டும் பாயும் என்பது ஒரு பழமொழி. பணம் இல்லாதவன் நடைப் பிணம். பணத்துக்கு இவ்வளவு பெரிய மதிப்பு உண்டு. ஆனல் அதை வைத்துக் காப்பது பெரிய தொல்லை. எடுத்து எடுத்துக் கொடுப்போமானல் குறைந்து கொண்டே போய்விடும். பூட்டி வைத்தால் இரவில் தூக்கம் வருவதில்லை. திருடர்கள் கொண்டு போய் விட்டாலும் போய்விடலாம். அதற்காகச் சேமிப்பாக பாங்கியில் போட்டால் அநுமான் பாங்க் போல முறிந்து விடுமோ என்ற ஐயப்பாடு எழும். பாங்கியில் அதிகப்படியாகக் குவிந்துவிட்டால் அரசாங்கம் பிடிங்கிக்கொள்ளுமோ என்று

அச்சம். தீயில் வெந்து கருகிப்போகலாம். வெள்ளத்தில் அழிந்து போகலாம். தீவினை வந்தால் மிடுக்குற்றுப் பற்றினும் அச் செல்வம் நில்லாமல் செல்வோம் என்று போய்விடும்.

ஆனல் படிப்பு இருக்கிறதே இது அள்ளி அள்ளி வீசினும் குறைவது கிடையாது; வளரும் தன்மையது. திருடர்க்கும், தீக்கும், வெள்ளத்துக்கும், அரசாங்கத்துக்கும், விதிக்கும் அஞ்சவேண்டியதில்லை. பணம் படைத்தவன்கூட மற்றவனை ஆட்டிவைக்க வேண்டுமானல் சிறிது கல்வி அறிவு பெற்றுத்தான் ஆகவேண்டும்.

### கற்றவரும் கல்லாதவரும்

ஒரே வயிற்றில் பிறந்தாலும் கற்றவனைத்தான் தாய் மதிக்கின்ருள்; கல்லாதவன் மூத்தவன் ஆனலும் அவனை மதிப்பதில்லை. நால்வகைச் சாதியுள் கீழ்ப்பட்ட ஒருவன் படித்தாலும் மேற்பட்ட சாதியினர் அவனுக்குக் கீழ்ப்படிவார்கள் – என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் என்ற பாண்டியன் கூறி உள்ளான். சாதியை விடப் படிப்புத்தான் மேலானது என்பதற்காகக் "கல்லா ஒருவன் குலநலம் பேசுதல் – நெல்லினுள் பிறந்த பதராகும்மே" என அதிவீரராம பாண்டியர் கூறி இருக்கிறர்.

### முடிவுரை

எனவே "பிச்சைப் புகினும் கற்கை நன்றே" என்ற வாக்கின்படி கற்கவேண்டியவற்றைக் கசடறக் கற்க வேண்டும். கற்றபிறகு அதற்குத்தக நிற்கவேண்டும். வாலறிவன் நற்றாள் தொழ வேண்டும்.



# "கோலம்"

திருமதி. சு. விஜயசரஸ்வதி அவர்கள்,
புலவர் மூன்றும் யாண்டு, சி. பா. சு. தமிழ்க்கல்லூரி, மயிலம்.



தாய்மார்கள் நமது வீடுகளில் தினந்தோறும் கோலம் போடக் காண்கிருேம். திருநாட்களில் வீதிகளிலும் கோலம் போட்டுச் சித்திரங்கள் தீட்டும் சிறப்புக்களைக் காண்கிருேம். திருக்கோயில்களிலும் அலகிட்டு, மெழுக்கிட்டு, கோலமிட்டுத் தொண்டு செய்யும் திருக்கூட்டத்தைக் காண்கிருேம்.

மங்கல நாட்களில் விதவிதமாகப் பொட்டுக் கோலம் போட்டுச் சின்னஞ்சிறு மக்களின் சிந்தனைக்கு வழிகாட்டுகிருர்கள்; கைத்திறனை வளர்க்கிருர்கள்; அறிவுடையோர் காட்டிய மெய்ப்பயனைப் பெறுகிருர்கள். கோலம் போடுவதில் என்ன மெய்ப்பயன் இருக்கிறது? கோலம் ஏன் போடவேண்டும்? அறிவுடையோரின் உட்கருத்து யாது என்பதை நாம் சிறிது ஆராய வேண்டும்.

இன்று பலர் வீடுகளிலும் சுண்ணப்பொடியும், மண்ணுப் பொடியும்கொண்டு, கோலக்குழாய்களால் கோடுகளை நிறைக்கும் நவீனம் பெருகிக் கைத்திறனுக்கே இடம் குன்றியபோது, பொட்டுக் கோலத்தின் மெய்த்திறன் குன்றியது ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆகவே, அறிவுடையோர் நம் இல்வாழ்க்கையில் ஒட்டுவித்த பொட்டுக்கோலத்தின் மெய்ப்பலனை அறிவது அவசியமாகிறது.

பொட்டுக் கோலம் என்பது, சுண்ணப் பொடியாலும் மண்ணுப் பொடியாலும் புள்ளிவைத்துக் கைத்திறன் பெறுவது மட்டுமல்ல. தானியப் பொட்டுக்களால் இழைக்கும் கோலம் என்பதே அறிவுடையோர் கொண்ட பொருள். கோலம் போடுவது, அதிலும் தானியப்பொட்டுக்களால்கோலம்போடுவது என்பதை ஏன் நமது இல்வாழ்க்கையோடு இணைத்துள்ளார்கள்?

உலக வாழ்வு செவ்வியதாய் நடைபெற்று மக்கள் நான்கு உறுதிப்பொருள்களையும் அடைவதற்கு, இறைவனும், இறைவனது அருள் பொழிவும், அவ்வருள் தங்களிடம் விளங்கும் தன்மையுடைய பெரியோர்களும், அப்பெரியோர்கள் கூறிய அறமும் வழியாகும். அறவழியை இல்லறம் துறவறமென இரு வகை நிலையால் கூறினார்கள். அவற்றுள் இல்வாழ்க்கை நிலைக்கு அருளப்பட்ட அன்புவழி இல்லறம். இல்லறத்தார்க்குரிய அறவழிகளில் ஒன்று கோலம் இழைத்தல். எவ்வாறு அறம் என்று அது கருதப்பட்டது?

இல்லறத்தாரின் அறங்களில், சிற்றுயிர்க்கு உணவு அளிப்பதுப் பெரிதாக மதிக்கப்பட்டது. உண்பதனைச் சிறு உயிர்கட்கும் பகுத்துக் கொடுத்து உண்ணும் அன்பு வழி, அருள் வழிக்கும் தலைமை தாங்கும் அறமாகிறது.

"பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை" என்பது திருக்குறள்.

மக்கள் உணவிற்கு வைத்திருக்கும் தானிய மணிகளைப் பகுத்து அதில் ஒரு பகுதியைப் பொட்டுப் பொடியாக்கித் தினமும் வீடுகளில் கோலம் இழைப்பதின் வழியாய் இல்லறத்தார்க்கு ஒரு நல்லறத்தை அறிவுடையோர் பொதிந்திருந்தார்கள். மக்கள் தங்களது வீட்டைச் சுத்தமாகவும், அலங்காரமாகவும் வைத்துக்கொள்வதோடு அறத்தையும், கைத்திறன் மிக்கச் சித்திரங்களை இழுக்கும் தொழில் பயிற்சியால் பொருளையும், சிற்றுயிர்களிடம் அன்புவழி காணும் இன்பத்தையும் உள்ளடக்கிய கருவூலம் கோலம் எனலாம். ஆகவே இந்தக் கோல வழிபாடு முறையாக அறம், பொருள், இன்பத்தால் வீட்டை அணுகுவதை நன்கு ஆராய்ந்தால் அறியக்கூடும்.

கோல வழிபாடு எவ்வாறு நுண்ணிய அறவழியில் செல்லுகிறது என்பதை ஆராய்வோம். கையில் அடங்கும் சிறு தானிய மணிகளின் பொடியால் இழைக்கும் கோலம், வீட்டை அழகுப்படுத்துவதுடன், எறும்பு முதலாயச் சிற்றுயிர்கட்கு உணவும்



ஆகிறது. பல உயிர்களை வளர்க்கும் உணவு கையளவு தானிய மணிகளில் இருக்கின்றன. மக்களால் இயலக்கூடிய அறங்களில் இதையும் விட எளிய அறங்கள் இல்லை.

இந்த எளிய அறம் மக்களது நல்வினைக்கு வித்தாகி நல்வினைவைத் தருகின்றது. இந்த எளிய அறத்திற்கும் மனமிளகாதவர்கட்குத் தீவினை வித்தாகித் தீயவிளைவை அளிக்கின்றது. முற்பகல் செய்வதுதான் பிற்பகல் விளையும்.

சுண்ணப் பொடியால் கோலம் இழைக்கும் பெண்மக்கள் தங்கள் தீயவினையால் தீயவிளைவுகளைத் தேடிக்கொள்வதைத் தவிர்க்க வேண்டும். உணவிற்கு அலைந்து நாடி வரும் சிற்றுயிர்கள் சுண்ணப்பொடி கண்டு உள்ளம் கொதித்துச் சாபமிட்டதன் தீய விளைவுகளை அறவழியன்றி வேறு எவற்றாலும் தடுக்கவியலாது. தீவினை பிறவிதோறும் நிழல்போல் வந்து சதிசெய்யும் என்பதைப் பெண்மக்கள் சிந்திக்க வேண்டும்.

"தீவினைச் சிலம்பு காரண மாக
ஆய்தொடி யரிவை கணவற் குற்றதும்
வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
சிலம்பொடு சென்ற சேயிழை வழக்கும்....
என்பது சிலப்பதிகாரம்.

ஆகவே அறத்தின் வழி ஒழுகினல், அடையத் தக்க பொருளினையும், அது கொண்டு இன்பத்தையும் நுகர்ந்து, முதிர்ந்தபோது மறுமை வீட்டையும் பெறும் நல்வினையாகிறது. கோல வழிபாடு மக்களின் நல்வினைக்கு எவ்வாறு தாயகம் ஆகிறது என்பதை ஆராய்வோம்.

கோலம் என்னும் சொல்லுக்கே அழகு என்பது பொருள். அழகு என்பது ஒழுங்கு; ஒழுங்கு என்பது விதி; விதி என்பது ஊழ்; ஊழ் என்பது வினை. ஊழ், வினை, உண்மை, தெய்வம் என்பன ஒரு பொருள் கிளவி. ஊழ்வினையால் செல்வமும், வறுமையும் மக்களை நெருங்குகிறது. மிக்க மேதையாகினும் கைப்பொருள் இழத்தற் கேதுவாகிய ஊழ்வந்த இடத்து அவனைப் பேதையாக்கும்; பேதையாகினும் கைப்பொருளாதற் கேதுவாகிய ஊழ்வந்தவிடத்து அவனது பொருளைப் பெருக்கிச் சீமானுக்கிவிடும்.

ஆகவே கோல வழிமாடு மக்களது நல்வினை, தீவினைக்கு அடிப்படை என்பதை அறிய முடிகிறது. அறவழிக்கோலம் நல்வினையும், அல்வழிக்கோலம் தீவினையும் பயக்க வல்லதாகிறது. ஊழ்வினைபோல் மிக்க வலியுடையன யாதுமன்று; தனக்குத் தானே தேடிக்கொள்ளும் தெய்வம். வெறும் முயற்சிகளால் பொருள்களைப் படைத்தல் அல்லது நுகர்தல் ஆகாது; ஆகவே அதற்கு ஊழ்வினையாகிய தெய்வம் அருளவேண்டும்.

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது." என்பது -திருக்குறள்.

நல்வினை விளையுங்கால் அதன் விளைவாக இன்பங்களைப் பெறுகின்றனர். தீவினை விளையுங்கால் அதன் விளைவாகத் துன்பங்களைப் பெறுகின்றனர். முன் பிறவியின் தீவினைப்பயனே மக்கள் பிறப்பில் சிறப்பில்லாத குருடும், வடிவில்லாதத் தசைத் திரளுமாய், கூனும், குறளுமாய், ஊமையும், செவிடுமாய், விலங்கு போன்றும் அறிவின்மையராய் எண்வகை எச்சமுடன் பயனில் பிறவிக்கடலில் வீழ்த்துகின்றது. இந்தத் துயரக் கடலில் திக்கு முக்காடும் உயிர்கள் கரைக்கு மீள ஒரு கப்பல் வேண்டு மல்லவா? அந்தக் கப்பல்தான் அறிவுடையோர் கண்ட அறக் கப்பல்.

"உறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கும்
அறத்துறை யம்பி....................." என்பது-புறநானூறு

இந்தக் கப்பலுக்குக் கட்டணம் மிகமிகக் குறைவுதான். குறைந்த கட்டணத்தில் நீண்ட யாத்திரையை முடிக்கின்றது. ஒரு வறிஞன் கூட இந்தக் கட்டணம் கொடுக்கத் தவற மாட்டானல்லவா? ஆகவே அறக்கப்பலுக்குக் குறைந்த கட்டணம் அன்புடைமை. நாம் சிற்றுயிர்களுக்கு உணவளிக்கும் கோல வழிபாட்டால் கருணையுடையவராகின்றோம்; ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப வாழ்வுதரக் கருணையே வடிவான இறைவன் தோன்று கிறார்.

"கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென்(று) ஓர்திருப்பேர் கொண்டு – திருநோக்கால்
ஊழ்வினையைப் போக்கி ..............
என்பது–கந்தர் கலிவெண்பா.

---

# இராமேச்சுரத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு

## சேமவைப்பு ரூ. 3,500/—

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்களின் வரிசையில் ஒரு தனிச் சுடர்மணியாக விளங்கியவர்களும், கல்வியாற்றலும், கூரிய மதியும், இணையற்ற தமிழன்பும் அறநினைவும், கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் சொல் வன்மையும் "இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன்கண் விடல்" என்ற குறட்கேற்பச் செயலாற்றிய வர்களும், கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் பரம்பரையில் உதித்தவர்களும், திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் 22-ம் பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் பால் சிவஞானோபதேசம் பெற்றவர்களும், 23—2—1930 முதல் 26—3—1944 வரை ஸ்ரீ காசிமடத்துத் தலைவராக எழுந்தருளி யிருந்தவர்களும், சென்னைப் பல்கலைக் கழகத்து வித்துவான் தேர்வில் முதல் எண் பெற்றவர்க்குப் பரிசு ரூ. 1,000/- ஆண்டு தோறும் கொடுப்பதற்கு ரூ. 35,000/- முதற்பொருள் வழங்கி அது முதல் அப்பரிசு வழங்கச்செய்தவர்களும், தமிழ் இலக்கணப் பயிற்சியும், சைவ சித்தாந்த நூற்பயிற்சியும், இசைப்பயிற்சியும் தமிழ் நாட்டில் ஓங்கிப் பரவும்பொருட்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 1. திருவள்ளுவர் நீதி நூற்பரிசு ரூ. 3,500/–, 2. சேக்கிழார் நினைவுப் பரிசு ரூ. 3,500/-, 3. ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு ரூ. 3,500/-, 4. கம்பர் நினைவுப் பரிசு ரூ. 3,000/-, 5. நம்பியாண்டார் நம்பி நினைவு பன்னிரு திருமுறைப் பரிசு ரூ. 3,000/-, 6. சிவக்கொழுந்து தேசிகர் நினைவு இசைத்தமிழ் பரிசு ரூ. 3,000/-, 7. மாணிக்க வாசக சுவாமிகள் நினைவு அகப்பொருள் பரிசு ரூ. 3,000/-, 8. ஸ்ரீலஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு யாப்பிலக்கணப்பரிசு ரூ. 3,000/-, 9. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சொக்கலிங்க சுவாமிகள்

நினைவு அணியிலக்கணப் பரிசு ரூ. 3,000-, 10. கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் நினைவு திருவாசகப் பரிசு ரூ. 3,000/-, 11. மெய்கண்டார் நினைவு சைவ சித்தாந்த சாத்திரப்பரிசு ரூ. 3,000/-, 12. ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு சைவ சித்தாந்த சாத்திரப்பரிசு ரூ. 30,000/-, 13. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தமிழ் இசைப்பரிசு ரூ. 30,000/- ஆக 13 பரிசுகளை நிறுவி ரூ. 94,500/- மூலதனத்தை அளித்தருளிய வள்ளன்மை மிக்க தாளாரும், கிராம கர்ணம் ஆசிரியர், வைத்தியர் ஆகியவர் தமிழ்புலவராகத் திகழ வேண்டும் என்று கருதி அரசியலாரிடம் ஒரு லட்சம் மூலதனம் அளித்தருளியவர் களும் ராஜ ராஜ அபயகுலசேகர சோழ மகாராஜா நினைவாகத் தேவாரத் திருமுறைப் பரிசும், தமிழ் இலக்கிய இலக்கண வெளியீட்டுத் திட்டமும் ஏற்படுத்தி 118 ஏக்கர் 75 செண்டு நன்செய் நிலத்தை அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தினரின் பரிபாலனத்தில் அளித்தவர்களும், பல தமிழ் நூல்களை வெளியிட்டவர்களும், சுபானு ஆண்டு பங்குனித் திங்கள் வளர் பிறை துதியை திதியில் பரிபூர்ணம் அடைந்தவர்களும் ஆகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் அவர்களை நினைவு கூர்ந்து அவர்கள் பரிபூரணமடைந்த திருநாளில் இராமேச்சுரத்தில் அன்னம்பாலித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப் பெற்றது. இது ராமேச்சுரத்தில் "ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு" எனப்பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 3,500/- (ரூபா மூவாயிரத்து ஐந்நூறு) பெறுமானமுள்ள 3 சத வீதம் வட்டி தரக் கூடிய சர்க்கார் கடன் பத்திரங்களாகவுள்ளது. (3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சிஎ. 137005 ரூ. 500/-, சிஎ. 141126 ரூ. 1,000/-, சிஎ. 141183 ரூ. 2,000/- ஆகக்கூடுதல் ரூ. 3500/- (இந்நிதி நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப்பெற்றுவரும்.

3. இராமேச்சுரத்தில் நம்முடைய சத்திரத்தில் நாடோறும் நடைபெற்று வருகின்ற அன்னதானத்துடனும், இம்மூலதனத்தி னின்று கிடைக்கும் வட்டித் தொகையைக் கொண்டு ஸ்ரீலஸ்ரீ



காசிவாசி சாமிநாத சுவாமிகள் பரிபூரணமடைந்த நினைவு நாளாகிய பங்குனித் திங்கள் வளர்பிறை, துதியை திதி வரும் நாளில் பிராமண போஜனமும், மகேசுவர பூசையும் நடத்தப் பெறும்.

4. ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டி வருமானத்துக்கு ஏற்பவும் கால விலைக்கு ஏற்பவும் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி இவ்வன்னம்பாலிப்பு நடைபெறும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலும் பயன்படுத்தப்பெற மாட்டாது. முதற்பொருள் அரசினரால் திரும்பியளிக்கப்பெறின் அதிக வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன்பத்திரங்களில் முதலீடு செய்யப்பெறும்.

Tirupanandal<br>2—12—1954 } (Sd) *Kasivasi Arulnandi Tambiran*



Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 7—12—1954 as No. 67 of 1954, Book No. 4, volume No. 45, pages 184 to 186.

தாய் ✓ கடவுள் ✓

# கைம்மாறு உண்டோ?

குடந்தை திரு. சு. கண்ணன் அவர்கள், B. A.,

சூலுற்ற நாள் முதற்கொண்டு ஈரைந்து திங்கள் வரை சுமந்து எண்ணிலா இன்னல்களையும், வரும் இன்பம் குறித்து பொறுத்துக்கொண்டு, ஈன்றெடுக்கிருள் ஒரு குழந்தையை அன்னை. அதற்குப்பின் எப்போது குழந்தைக்குப் பசிக்கும், உணவு கொடுக்கவேண்டும் எனத் தெரிந்துவைத்துக்கொண்டு "பால் நினைந்தூட்டு"கிருள்; தாலாட்டுகிருள்; சீராட்டி வளர்க்கிருள். எல்லாம் அன்பின் விளைவே.

இவ்வாறு தாயின் குழைந்த அன்பின் அரவணைப்பில் வளர்கிறது குழந்தை. வளரும் குழைந்தைக்கு ஓய்வு நேரத்தில் கல்வி புகட்டுகிருள், ஆசிரியளுக இருந்துகொண்டு. நல்ல வழியில் நடத்திச் செல்கிருள் சிறந்த நண்பனைப்போல. தவிர குழந்தைக்கு நோய் வந்தால் மருந்தூட்டுகிருள், மருத்துவளுக இருந்து. இவ்வாறெல்லாம் தாய் எல்லாப் பாகங்களையும் ஏற்று திறம்பட நடிக்கும் திறமை பெற்றிருக்கிருள். தன் மக்களைக் காக்கும் பணியில் தனக்குவரும் துன்பங்களை மதிப்பதில்லை; ஏற்றுக்கொள்கிருள்; பொறுத்துக்கொள்கிருள். தாய்மை அன்பின் தாங்கும் சக்தி அவ்வளவு!

ஓர் நாள் தன் மகன் பிறரைப்பற்றித் தகாத வார்த்தைகளால் ஏசுவதைக் கேட்கிருள் தாய். திடுக்கிடுகிருள், மகன் செல்லும் தவருன பாதையைக் கண்டு. உடனே அருகழைத்து அன்புடன் "செல்வமே! இனிய சொற்களையே சொல்ல வேண்டும். வன் சொற்கள் இன்னல் விளைவிக்கும். அவை வேண்டாம். இனி அதுபோல் பேசாதே" எனக் கனிந்த மொழிகளால் அவனைத் திருத்த முயல்கிருள்.

இவ்விதம் குழந்தை சொல்லாலும், செயலாலும் செய்யும் ஒவ்வொரு தவருன செயலையும் திருத்தி அவனை நல்வழிப்படுத்துகிருள். கட்குடித்து தாயை வந்து அடிக்கும் அரக்கத்தன்மை



படைத்த மைந்தனிடம்கூட தாய் மிக அன்புடன் "அப்பனே! அது சான்ருேர் பழிக்கும் செயல், விட்டொழி" எனக் கனி மொழிகளால் அதன் கேடுணர்த்தித் திருத்த முயல்கிருள். இவையெல்லாம் எதனுல்? தன் மகன் நல்லோளுக வாழ வேண்டும், சான்ருேர் அவனைப்போற்ற அவன் வாழ்தல் வேண்டும் என்ற அவாதான். சான்ருேர் தன்மகனைப் போற்றும்போது, ஈன்ற பொழுதின் பெரிதுவக்கம் இயல்பினள் அல்லவா தாய்!

வள்ளுவர்கூட தந்தை மகன் தனக்குச் செய்வது இன்னது என்று வரையறுத்துக் கூறிவிட்டார். மகனைக் கற்ருேக்குவதுதான் தந்தையின் கடமை என்ருர். ஆனுல் எங்கேனும் தாய் மகனுக்குச் செய்யும் கடமையைக் குறிப்பிட்டாரா? இல்லை. ஏன்? அது அளவில் அடங்காது. பால் நினைந்தூட்டும் பருவம் முதற்கொண்டு, பழுத்து கிழம் ஆகும் காலம் வரை தாய் மகனுக்கு எத்துணையோ உதவிகளை, மகன் தனக்குத் துன்பம் விளைவித்தாலும், செய்கிருள். அவைகளே தலைசிறந்த அன்புச் செயல்கள்; ஒப்பற்றவை; ஒளிருந்தன்மையன.

இப்படிப்பட்ட தாய்க்கு நாம் என்ன கைம்மாறு செய்ய முடியும்? பணத்தால், உடலின் சேவையால்—ஒன்ருலும் முடியாது. கைம்மாறு செய்யும் அளவுக்கு அப்பாற்பட்டது அது. இதை வள்ளுவர்கூட காட்டியிருக்கிருர். தந்தை செய்யும் உதவிக்கு மகன் திருப்பி உதவி செய்ய முடியும். அதுவே மகன் தந்தைக்கு தன் நன்னடத்தையால் வாங்கித்தரும் நல்ல பெயர் என்று சொன்ன வள்ளுவர், மகன் தாய் தனக்குச் செய்திருக்கும் உதவிக்கு கைம்மாறே செய்ய முடியாது என்று உணர்ந்த காரணத்தாலோ என்னமோ, மகன் தாய்க்கு ஆற்றும் உதவி பற்றி ஒரு குறள்கூட எழுதவில்லை. அந்த ஒப்பற்ற உலகறிஞர்.

இந்தத் தாய்க்கே நாம் கைம்மாறு செய்ய முடியாதென்ருல் நமக்கு இந்தப் "பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரியும்" மற்ருெரு தாய் இருக்கிருளே அவளுக்கு எப்படி கைம்மாறு செய்யப்போகிருேம்?

அவள் யார்? அவள்தான் உலகத்திலுள்ள எல்லா உயிர்களுக்கும் தாயாகிய பரம்பொருள். இவருக்கும், தம் குழந்தைகள் எல்லாம் உய்யவேண்டும் என்பதுதான் எண்ணம், குறிக்கோள்; நோக்கம் எல்லாம். இவரும் "ஈன்றாளுமாய் எனக்கெந்தையுமாய், உடன் தோன்றினராய்" இன்னும் "தோழனுமாய்" எல்லாவுருவாகவும் வலியவந்து உதவிபுரிகிறார்.

இதற்காக எவ்வளவோ துன்பங்கள் அடைந்திருக்கிறான் அவன். கூலியாளாய் வந்து பிட்டுக்கு மண்சுமந்து, மன்னன் கைப்பிரம்பால் அடிபட்டான்; வேட்டுவனுன்; ஐவருள் ஒருவனுல் வில்லால் அடிபட்டான்; பக்தன் ஒருவனை ஆட்கொளப் போய் "பித்தா" என அவனுல் அழைக்கப்பட்டான்; ஏவுண்ட பன்றிக்கிரங்கி கேவலங் கேழலாய் பால்கொடுத்தான்" இவை போல் இன்னும் எத்துணை எத்துணையோ!

அவன் நாம் செய்யும் தீய செயல்களினின்றும் விலக்கி, நம்மை ஆட்கொள்கிறான்.

அவன் நமக்கு உடம்பு கொடுத்திருக்கும் உண்மையை அறியாது, அதை எவ்வாறோ பயன்படுத்துகிறோம். பாவையாட்டத்தில், ஆட்டப்படும் பாவை போன்று, நாமும் ஐம்பூதங்களினுல் ஆட்டப்படுகிறோம். "மாறி நின்று மயக்கும் வஞ்சப் புலனைந்தின் வழி" நின்று தடுமாறுகிறோம். பார்க்கக்கூடாதவற்றைப்பார்க்கிறோம்; சொல்லக்கூடாதவற்றைச் சொல்கிறோம். செய்யக்கூடாதவற்றைச் செய்கிறோம்; எண்ணத்தகாததை எண்ணுகிறோம். "வேனில் வேள் மலர்கணைக்கும், வெண்ணகைச் செவ்வாய் கரிய பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகு"கிறோம். சிந்தனை அவனுக்காக்க வேண்டும். கண்ணினை அவன் திருப்பாதப் போதுக் காக்கவேண்டும்; வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கவேண்டும்; வாக்கு அவன் மணிவார்த்தைக் காக்க வேண்டும் என்று அறிந்து கொள்ளாமல், நாம் வல்வினைப் பட்டு கேடுநமக்கே சூழ்ந்து கொண்டு, அவலக் கடலாய வெள்ளத்தே வீழ்ந்து அலமருகின்றோம்.



இவ்விதம் நமக்கும் அவனுக்கும் நாம் இழைக்கும் தீங்கைப் பொறுத்துக்கொள்கிறான். நம் புலனைந்தின் வழியையும் அடைத்து நாம் வேறு வழி செல்லாதவாறு தடுக்கிறான். நம்முள்ளே அவன் புகுந்து, ஊனினை உருக்கி, அஞ்ஞானமான பொய்யிருளைக் கடிந்து, மெய்யொளி பரப்புகிறான். பின்பு பிறப்பு இறப்பெனும் பெரும்பிணி அறுத்து உலப்பிலா ஆனந்தமாய தேனினையைச் சொரிந்து இன்னருள் புரிகிறான். நாம் பேரின்ப நிலையை அடைய வழிகாட்டி அழைத்துச் செல்கிறான்.

பண்டைக் காலத்தில் பண்ட மாற்றுமுறை என்று ஒரு பழக்கம் உண்டு. எல்லாப்பொருள்களும் ஒரே இடத்தில் விளையாதல்லவா? ஆதலால் ஓர் ஊர் மக்கள் தங்கள் ஊரில் விளையும் பொருளைக் கொடுத்துவிட்டு, அதற்குப்பதிலாக தமக்குத் தேவையான வேறு பொருளை மற்ற ஊரினரிடமிருந்து பெறுவர். காசு கொடுத்து பொருள் வாங்கும் வழக்கம் வாராத காலம். பொருளைக் கொடுத்துப் பொருளைப் பெறுவர்.

அதுபோல ஈசனும் நம்மோடு பண்டமாற்று வியாபாரம் செய்கிறான். மாற்றப்படும் பொருள்கள் ஈசனும் நாமும்தான். ஈசன் தன்னையே கொடுத்துவிடுகிறான். நம் உடலையே தன் கோயிலாகக் கொண்டு கனியப்புகுந்து நிற்கிறான். அதற்குப் பதிலாக ஈசன் கொள்வது நம்மை – அறிவிலாத நம்மை, பாவியாகிய நம்மை, அவனைப்பாடியும், ஆடியும் பணியாத நம்மை, அவனடியார்போல் நடிக்கும் நம்மை.

பண்டமாற்று முறையில் இரண்டு பொருளும் ஏறத்தாழ சம மதிப்புடையதாய் இருக்கும். ஆனல் இதிலோ கருணைக் கடலாகிய அவன் தன்னைத்தந்து, நாயினும் கடையனுய நம்மைக் கொள்கிறான்.

பண்டமாற்றில் மாற்றிக்கொள்ளும் இருவரும் பயன் அடைகிறார்கள். ஆனல்................? அவன் நம்முன் வந்து உறைவதால் நாம் அந்தமொன்றில்லா ஆனந்தம் அடைகிறோம்.

பின்பு பேரின்ப நிலையை அடைகிறோம். ஆனால் அவன் நம்மைக் கொள்வதில் அடையும் பயன் என்னவாக இருக்க முடியும்.

இவ்விதம் நாம் செய்யும் சிறுமையெல்லாம் பொறுத்து, கட்டறுத்து, நம்மையாட்கொண்டு, பயன் கருதாது நமக்குப் பேரின்பநிலை நல்கும் நம் பெருமானுக்கு நாம் கைம்மாறு செய்ய முடியுமா? முடியவே முடியாது.

இதையேதான் மாணிக்கவாசகரும் திருவாசகத்தில் சொல்லுகிறார்.

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பாற்
சிந்தையே கோயில் கொண்ட வெம்பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா வுடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனொர்கைம் மாறே."

---

**பல்லவி**

கவலை உனக்கினி இல்லை பயமேன்
கலங்கித் திரிந்து மூலாதே மனமே

**அனுபல்லவி**

கருணைக் கடலாம் அறுமுகச் செவ்வேள்
காக்கும் கடவுள் கந்தனே நின்பால்

**சரணம்**

ஆழிநடு நின்ற அரக்கனைத் தடிந்து
ஆடுமயிலு அன்னச் சேவலுமே கொண்டான்
அல்லல் தீர்த்து அடியவருக் கருளும்
அருமைக் குமரன் ஆறுமுகன் இருக்க (கவலை)

சு. கண்ணன் B. A.

# திருவெம்பாவை



பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே
பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்
வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலு
மோத வுலவா வொருதோழன் றொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகா
ளேதவனூ ரேதவன்பேர் ஆருற்றா ராரயலா
ரேதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய்

திருவெம்பாவை 10.

உரை:- 'பாதமலர்—ஆண்டவனது திருவடி மலரானது, பதாளம் எழினும் கீழ்—கீழுலகம் ஏழுக்கும் கீழாக, சொல்கழிவு—சொல்லில் அடங்காத நிலையிலிருப்பதாகும், போது ஆர் புனை முடியும்—பூக்கள் நிறைந்த அழகிய அவனது திருமுடியும், எல்லாப் பொருள் முடிவே—அனைத்துப் பொருள்களின் முடிந்த முடிபா யிருப்பதாகும், பேதை ஒருபால்—பெண்ணை ஒரு பாகத்திலே உடையான், திருமேனி ஒன்று அல்லன்—ஒரு வகைப்பட்ட திரு மேனியை உடையவனல்லன், வேதம் முதல்—மறைகள் முதலாக விண்ணோரும்—தேவர்களும், மண்ணும்—நிலவுலகத்திலுள்ளவர் களும், துதித்தாலும்—புகழ்ந்து பாராட்டினாலும், ஓத உலவா—அப் புகழ்ச்சி முற்றுப் பெறாதவனாகி, தொண்டர்—அடியவர்களுக்கு, ஒரு தோழன் உளன்—ஒரு நண்பன் இருக்கின்றான், அரன் தன் கோயில்—சிவபெருமானது திருக்கோயிலிலேயுள்ள, கோது இல் குலத்து—குற்றமற்ற நல்லகுலத்திலே உதித்த, பிணாப் பிள்ளைகாள்—பெண்பிள்ளைகளே, அவன் ஊர் எது—அவனது ஊர் எது, அவன் பேர் எது—அவனது பேர் என்ன, ஆர் உற்றார்—யார் அவனுக்கு உறவினர், யார் அயலார்—யார் அவனுக்கு அயலார், எது

---

"செட்டிநாடு" பசுந்தமிழ் மலர்ப்பகுதியில், ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் எழுதப்பெற்றது. இக்கட்டுரை ஆசிரியர் அனுமதியுடன் பிரசுரிக்கப்பட்டது.

அவனைப்பாடும் பரிசு-அவனைப் பாடுகின்ற முறை யாது, எல் ஓர் எம்பாவாய்-எமது பாவையே ஓர்ந்து கூறுவாயாக' என்பதாகும்.

மனங்கரைந்து மலங்கெடுக்கும் வாசகத் திருமுறையில் திருவெம்பாவை, இருபது பாடல்களைக் கொண்டு விளங்குகின்றது. 'எம்பாவாய்' என்னுந் தொடர்மொழியை ஒவ்வொரு திருப்பாடலின் இறுதியிலும் கொண்டு இப்பகுதி அமைந்திருக்கிறபடியால் இது 'திருவெம்பாவை' என்னும் பெயர் பெறுவதாயிற்று.

திரு, என்பது தெய்வத்தன்மை என்னும் பொருள்கொண்ட மங்கல அடைமொழியாகும்; கண்ட அனைவருக்கும் எவ்வித மாறுபாடுமின்றி ஒரே படித்தான அழகுடையதாக எந்தப் பொருள் காணப்பெறுகின்றதோ, அந்தப் பொருளே 'திரு' என்ற அடைமொழி கூட்டிச்சொல்லுதற் குரியதாகும். இதனாலேயே 'திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம், என்ற அழகு' என்று பேராசிரியர் கூறினர்.

மணிவாசகப் பெருந்தகையார் திருப்பெருந்துறையில் அருளுபதேசம் பெற்ற பிறகு, திருவுத்தரகோசமங்கை முதலிய பல தலங்களுக்கும் சென்று ஆண்டவனை வழிபட்டுத் திருவண்ணாமலையை அடைந்தார். அப்போது, முன்பனிப் பருவத்தொடக்கமாகிய மார்கழித் திங்கள் வந்தது.

அந்நாளில் திருமணம் பெறவேண்டிய கன்னிப் பெண்களிற் பலர் வைகறைப் பொழுதில் துயிலுணர்ந்தெழுந்து, ஒருத்தியும் பலருமாகத் தோழியர்களின் இல்லங்கள் தோறும் சென்று அவர்களைத் துயிலுணர்த்தி யெழுப்பியதையும், அவர் அனைவரும் ஒன்று சேர்ந்து இறைவனது திருப்புகழை வாயாரப் பாடிக் கொண்டு நீர்நிலைக்குச் சென்று நீராடியதையும், உலகன்னையாகிய பார்வதியம்மையின் திருவுருவத்தை ஈரமணலாற் சமைத்துப் பொதுவுஞ் சிறப்புமாகிய பயன்வேண்டி வழிபட்டதையும் நேரிற் கண்டு, அப்பெண்கள் கூற்றாக அடிகளார் திருவெம்பாவையை அருளிச் செய்தார்களென்று புராணம் கூறுகின்றது.



திருவெம்பாவை, திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப் பெற்றதெனத் திருவால வாயுடையார் திருவிளையாடலும், திருவண்ணாமலையில் அருளிச் செய்யப் பெற்றதெனத் திருவாதவூரடிகள் புராணமும் கூறுகின்றன. 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி, மாலறியா நான்முகனும் காணாமலை, அண்ணாமலையான் அடிக்கமலம், பாதாளம் ஏழினுங்கீழ் சொற் கழிவு பாதமலர், போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே' என்பன வாதிய அடிகளாரது திருவாக்குகளால், இத் திருவெம்பாவை திருவண்ணாமலையில் அருளிச் செய்யப் பெற்றதென்று கொள்வதே பொருந்துவதாகும்.

முன்னாளில் கன்னிப்பெண்கள் மார்கழித் திங்களில் வைகறைப் பொழுதில் நீராடிப் பராசத்தியாகிய கௌரியை வழிபட்டுப் பொதுப்பயனாகிய மழை வளத்தையும் சிறப்புப் பயனாகிய தன் மணவாளரையடைதலையும் பெற்றனரென்று சைவ வைணவ நூல்கள் தெரிவிக்கின்றன. இதனைச் சைவ நூலாகிய திருவாசகத்திலுள்ள திருவெம்பாவையாலும் வைணவ நூலாகிய திவ்யப் பிரபந்தத்திலுள்ள திருப்பாவையாலும் அறியலாம்.

ஆயர்குலக் கன்னியர் கண்ணனை மணவாளனைப் பெற விரும்பி இந்நோன்பை மேற்கொண்டனரென்று பாகவதம் கூறுகின்றது. 'இன்ன தண்பனிப் பருவநல் லிளநறு வொழுகுங் கன்னி யந்துழாய்க் கண்ணனெங் கணவனு கென்ன, யன்ன மென்னடையாயர்தங் கன்னியர் நோற்றார், மன்னுவெம்பனி மால்வரைக் கன்னியைத் தொழுதே' என்பது ஆரியப்பப்புலவர் பாகவதத்திலுள்ள செய்யுள்.

'பாவையாகிய பார்வதியைக் குறித்து நோற்கின்ற நோன்பைக் கூறுவது திருவெம்பாவையாதலின் இப்பகுதிக்குச் சத்தியை வியந்தது' என உள்ளுறைப் பொருள் குறிக்கப் பெற்றுள்ளது.

மார்கழி நீராடலால் விரும்பப் பெறுகின்ற பொதுப்பயன் 'முன்னி யவள் நமக்கு முன் சுரக்கு மின்னருளே, யென்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்' என்பதாலும், சிறப்புப் பயன் 'உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்கா வோம், எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க' என்பனவற்றாலும் அறியக்கிடக்கின்றன.

ஒருங்குகூடிய கன்னிப் பெண்களனைவரும் சிவபெருமானுடைய திருக்கோயிற் பணிபுரியும் பெண்மக்களை விளித்து அவ்விறைவனிடத்துத் தம்மைக் காட்டிலும் நெருங்கியிருக்கும் வாய்ப்புடைமையை யெண்ணி அவர்களிடத்து ஆண்டவனைப் பாடத்தக்க பரிசு ஏதென்று கேட்பதை இப்பாடல் அறிவிக்கின்றது.

மாலும் பிரமனும் தாந்தாமே பிரமனென்று செருக்குற்ற போது, செந்தீமலையாகி வளர்ந்த சிவபெருமானது அடிமுடிகளைக் காணமாட்டாது, அவர்கள் மயங்கினர். ஆணவம், கன்மம், மாயை என்று சொல்லப் பெறுகிற மூன்று மலங்களுள் மாயா மலத்தைத் தாயகமாகக் கொண்டு தோன்றியது பிரபஞ்சம். அதனைச் சொற்பிரபஞ்சம் என்றும் பொருட் பிரபஞ்சம் என்றும் இருவகைப்படுத்திக் கூறுவர்.

சொல்லும் பொருளுமாகிய இரண்டுங் கடந்த இடமே இறைவனைக் காணுகின்ற இடம். கீழுலகம் என்று சொல்லப் பெறுகின்ற ஏழும் நமது கண்ணால் காணுதற்குரியனவாயில்லா தனவேனும், சொல்லால் அறிவும் பெற்றியெனவாயிருக்கின்றன. இறைவனது திருவடி அவ்வாறு மொழியாலுரைக்க முடியாத சீர்த்தியுடையதாகலின் 'சொற்கழிவு பாதமலர்' என்று உணர்த்தப்பெற்றது.

ஆண்டவனது திருமுடி மற்றை எல்லாப் பொருள்களின் முடிவாக இருக்கின்றது என்றது சொல்லால் அறிதற்குரிய பொருளெல்லையைக் கடந்தது என்பதைக் குறிப்பதாகும். இனித் திருவடியைச் சொற்கழிவு எனவும் திருமுடியைப் பொருள் முடிபு எனவும் உரைத்தருளியது, சொல் ஆதாரமாகக் கீழே



நின்று பொருளைத் தாங்குவதாலும் பொருள் ஆதேயமாக மேலே நின்று சொல்லால் தாங்கப் பெறுவதாலும் என அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

'பேதை ஒருபால் திருமேனி யொன்றல்லன்' என்பதனால், இப்பாடலில் சத்தியை வியந்த உள்ளுறை புலப்படுவதாகும்.

'வேதம் இறைவனுடைய புகழை எடுத்தோதுவது. அப் புகழ்மாலையாகிய மறைப்பாடல்களைப் பாடி இன்புறுவர் தேவரும் மனிதருமாவார். அவ்வாறு வேதத்திற் கூறப்பெற்ற புகழுரைகளை எத்தனைதான் எடுத்துரைத்தாலும் இறைவனது புகழ் முழுவதையும் எடுத்தியம்பிவிட்டதாகச் சொல்லமுடியாது. அத் துணைப் பெருமையுடையவனாகிய ஆண்டவன், கருதுவார்க்குத் ஆற்ற எளியவனாகும் பண்புடையவனா யிருக்கின்றானென்பதை 'தொண்டர் தோழன்' என்பதாற் குறித்தருளினர்.

கீழ்மேல் எல்லைகளைக் கடந்துள்ள அடிமுடிகளையுடையவனாகிய ஆண்டவன் இந்நிலவுலகத்தின் ஒரு சிறு கூறாகிய இடத்தில் எவ்வாறு அடங்குவான் என்பார் 'ஏதவனூர்' என்றார்.

உடம்பைப்பற்றி இடப்பெறுவது பெயராதலின் ஆணும் பெண்ணுமாகிய திருமேனியையுடைய அவனை எந்தப்பெயரால் குறிப்பிடலாமென்பார் 'ஏதவன்பேர்' என்றார்.

உயிர்களனைத்தையும் விருப்பு வெறுப்பின்றி ஒருசேர நோக்கும் பெருங் கருணையையுடையவன் அவன் என உணர்த்துவார் 'ஆருற்றார் ஆரயலார்' என்றார்.

வேதமும் ஓதவுலவாத பெருமையுடைய அவனைப் பேதையராகியயாம் எவ்வாறு பாடவல்லேம் என்பதை உணர்த்துவார் 'ஏதவனைப் பாடும் பரிசு' என்றார்.

---

இறைவன் ✓

# இன்பக் கனி

திரு. அ. அண்ணுமலைக் கவுண்டர் அவர்கள்,
பொம்மனப்பாடி (P.O.) திருச்சி ஜில்லா.



அமிழ்தினும் இனிய தமிழ்மொழியை நன்குணர்ந்த மகான்கள் அருளிய அருநூல்களையும், நூல்களில் காணப்பெறும் மொழிகளையும், மொழிகள் இறைவன்பாலும், மக்கள்பாலும், பிறவற்றின்பாலும், உணர்த்தும் உயரிய கருத்துக்களையும் உற்று நோக்குமிடத்து, கற்றவற்குக் கரைகாணு இன்பப்புணரியாய் அமுதவெள்ளமாய் ஆனந்தத் தேனுய் அரிய நறுங்கனியின் இனிய சுவையாய் இன்னேசையின் இயல்பாய், இதயங்களிக்கச் செய்கிறது. என்னே நம் தமிழ் மொழியின் இனிமையின் தனிமை! ஒரு சிறிது காண்பாம்.

மாநிலத்துக்கு மழைபோல், மக்கள் வாழ்கைக்கு இனிய துணையாயுள்ளது மொழி. மொழிக்கு ஆதாரமான எழுத்துக்கள் தேசங்கள் தோறும் பலவித உருவில் அமைந்து பேச்சுக்களும் அவ்வாறு பலவிதமாய்ப் பேசப்பட்டு வருகின்றன. எனவே, நம் தாயகமாம் தமிழ் மொழியை ஆராயப்புகின், மற்ற மொழியைக் காட்டினும் தமிழ் மொழிக்கு ஒரு தனி சிறப்புண்டு. அஃதெவ்வாறெனில் மொழிக்குக் காரணமாம் எழுத்துக்களுக்கு முதலாவதான அகரத்தை வள்ளுவர் முதலானோர் இறைவனுக்கு உவமை காட்டுகின்றனர். இதனுல், பிறமொழிகளைத் தன்னகத்தே கொண்டு தான் தலைமை பெற்று விளங்கும் உயரிய தமிழ் மொழியின் தகவான பண்பாடுகள் ஒருவாறு புலனுகின்றது.

"அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு" (வள்ளுவர்)

"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து" (உமாபதிசிவம்)



... ... ... அக்கரங்கள் தோறும்
சென்றிடும் அகரம்போல நின்றனன் சிவனும் சேர்ந்தே
(அருணந்திசிவம்)

என்பனவாதி பாசுரத்தால் இறைவனுக்கும், அகரத்துக்கும் உள்ள ஒற்றுமை விளக்கமுறுகின்றது.

அன்றியும் இவ்வுயரிய தமிழில் காணும் சில சொற்கள் மன்பதைகளுக்கு இன்பகரமான ஆன்ம உணர்ச்சியை ஊட்டி வீட்டின்பத்தைத் மேவுவிக்கின்றது. அஃதெவ்வாறெனில் கனி என்னும் ஒரு சொல்லை எடுத்துக்கொண்டால் அதன் உட்கருத்துக் களின் இயல்பான இனிமையும், தனிமையும், இயற்கை நிலைகளும் சிந்தித்தவற்கு செந்தேனமுதமாய் தித்திக்கச் செய்கிறது. அதனை ஈண்டு ஒரு சிறிது சிந்திப்போமாக.

பழுப்பது பழம் என்றுற்போல், கனிவது கனியென்ருயிற்று. ஒருவர் மற்றொருவரை நோக்கி நீ கனியென்ருல் மக்கள்பால் இரங்கு. அல்லது உயிர்க்கு இதம் செய் என்னும் உட்கருத்தை உணர்த்துகின்றது. பழம் என்ருல் நீ அறிவு நிரம்பினை, அல்லது வயது முதிர்ந்தனை, உனக்கு இறுதிகாலம் கிட்டிற்று. நீ சாகப் போகிருய். இவ்வுடலுள்ளபோதே உயிர்க்குறுதியான ஆன்ம பிரயோசனத்தை விரைவில் தேடிக்கொள் என்னும் கருத்தினைக் குறிப்பாய் உணர்த்துகிறது. இறைவனை நோக்குமிடத்து முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே அடியேனை ஆட்கொள்ள எளியேன்மீது கருணைசெய் என்னும் பொருளை உணர்த்துகிறது.

இதனுல் இறைவன் திருவருள் கைவரப்பெற்ற பெரியார்கள் இறைவனை கனியாகவும், பழமாகவும், அதன் சுவையாகவும் பிறவகையாகவும் தமக்கு இயன்றவாறு வருணிக்கின்றனர்.

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை
கரையிலா கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கை. (திருவிசைப்பா)

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகைகிடைத்த
குளிர்தருவே, தருநிழலே, நிழல்கனிந்த கனியே
மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே
மென்காற்றில் விளைசுகமே, சுகத்திலூறும் பயனே.
(திருவருட்பா)

கற்றவர்க் கருளும் கனியே போற்றி (தேவாரம்)

என்பனவாதி ஆன்றோர் வாக்குகளால் இறைவன் பெற்றியை உணரலாம்.

இத்தகைய கனியொன்றை அப்பரடிகள் கண்டார். அன்புடன் உண்டார். தாமின்புறுவது உலகின்புறக்கண்டு என்னும் கோட்பாட்டின்படி அதன் இன்பச் சுவையினை மற்றோருக்கும் ஊட்ட விரும்பினார். வம்மின் உலகீர். கனியொன்று தருகிறேன். அதனை உட்கொள்ளுமின் அது நரை திரை மூப்புப்பிணி சாக்காடென்னும் வெவ்வினையை போக்கி முத்தி இன்பமாகிய வீடு பேற்றையருளவல்லது என்னும் கருத்தைத்தழுவிய பாடலினால் விளக்குகிறார். என்னே அப் பாடலின் அழகு!

மனிதர்காள் இங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந்தாற் கனி உண்ணவும் வல்லிரேல்
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே. (தேவாரம்)

இதனை இன்னொரு வகையில் பார்க்குமிடத்து ஒருவருக்கு விளங்காத ஒரு பொருள் விளங்குமிடத்து அது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கமுற்றது என்னும் பழமொழியும் நாட்டில் வழங்கி வருவதையும் காணலாம். அன்றியும் கனியென்றால், அதில் ஒருவருக்கு இனிமையும், விருப்பும் இயற்கையாய் எழுகின்றது.

உதாரணமாக பாண்டவர்கள் ஆரணிய வாசம் செய்யும் போது ஒரு இனிய மலர்ச்சோலை தென்பட்டது. ஐவரும் அதன் உள்ளே சென்றார்கள். ஆங்கு அழகிய நெல்லிக்கனியொன்றை துரோபதை கண்டாள். அன்னவளுக்கு அதில் இச்சை



யுண்டாயிற்று. அதனை பார்த்தனிடம் பகர்ந்தாள். அவ்வடி வழகனும் விரைவில் தன் வில்லம்பினால் அக்கனியை கொய்தான். இதனை, அடியில் வரும் வில்லியாழ்வாரின் சொல்லோவியத்தில் கண்டு மகிழலாம்.

நன்னலமிகுந்த நெல்லி நறுங்கனி யொன்று கண்டாள்
கன்னலும் புளிக்கும் இன்சொல் கயிரவம் கருகும்வாயால்
இக்கனி எனக்குநீ நல்கென்று வில்லிறுத்துக் கொண்ட
மைக்கனி களவுமானும் வடிவுடை விசயனோடு
மெய்க்கனி வுடைதோன்ற விளம்பினாள் வீசுதென்றல்
முக்கனி கமழும் சோலை முகில் தவழ்நாடன் பாவை. (பாரதம்)

மற்றொரு வகையில் அன்பர்கள் இதனை அன்புக்கனி, இன்பக்கனி அற்புதக்கனி, விற்பனக்கனி, ஆனந்தக்கனி, போகக்கனி, ஏகக்கனி, செழுங்கனி, தீங்கனி என அகம் புறம் என்னும் இருவகை நிலைகளிலும் வைத்துப் பேசி வருகின்றனர். அஃதென்னேயெனின் பின்னே காண்க.

காட்சிக்குரிய கனியொன்றை நாம் நேரில் பார்க்குமிடத்து அத்தருவின் வித்து, முளை, கிளை, தழை, அரும்பு, மலர், காய் முதலிய பண்புகள் அனைத்தும் அனுமானித்து உணரப்படுகிறது. அதேபோல் மற்றொரு வகையில் ஒரு நகரமானது இன்ப நிலையமாக விளங்குகிறது என்றால், அந்நகரத்தில் வாழும் மாந்தர்கள் சுகபோகிகளாய் எவ்வாறு இருக்கக்கூடும் என்ற இயற்கை அமைதிகளையும் நன்கு உணரவேண்டும். இதனைக் கல்வியிற் பெரிய கம்பரும் தன் காவியத்தில் கதா நாயகனை இராமன் அவதாரம் செய்த அயோத்தி மாநகரத்தை வருணிக்கும்போது மன்பதைகள் கண்டு இன்புறுமாறு தன் சொல்லோவியத்தில் அமைத்துக்காட்டுகிறார்.

ஏகமுதற்கல்வி முளைத்தெழுந்து எண்ணில் கேள்வி
ஆகம்முதல் திண்பணை போக்கி அருந்தவத்தின்
சாகம்தழைத்து அன்பு அரும்பித் தருமம்மலர்ந்து
போகங்கனியொன்று பழுத்தது போலுமன்றே இராமாயணம்

இக்கவியை கருத்தூன்றி நுனித்து நோக்குமிடத்து, கல்வி கேள்வி, தவம், அன்பு, தருமம் முதலிய அரிய உறுதி நலங்கள்

யாவும் ஒருசேர உணர வருகிறது. அதானது கல்வி என்னும் வித்திலிருந்து இனிய தருவொன்று முளைத்தெழுந்து கேள்வியான பல கிளைகள் கவடுவிட்டு நீண்டு, தவம் என்னும் தழைகள் தழைத்து அடர்ந்து அன்பாகிய அரும்புகள் எங்கணும் அரும்பி-புண்ணிய மென்னும் மலர்கள் நன்கு பூத்து காய்த்து இன்ப மென்னும் அரிய பழம் ஒன்று அதில் பழுத்து, அதனை அன்புடன் உண்டு களித்து மாந்தர் இன்புற்றிருப்பது போல் அந்நகரம் விளங்கிற்றென்பதாம். இக்கவியை மக்கள் யாண்டும் சிந்தித் துணரவேண்டும்.

இன்னும் பிறிதொருவகையில் முற்றுந் துறந்த பட்டினத் தடிகள் கூறிய இனிய தீங்கனியொன்று ஞாபகம் வருகின்றது. கம்பர், வித்திலிருந்து ஆரம்பித்தார், அடிகள் நிலத்திலிருந்து தொடங்குகிறார். ஏனெனில், வித்துக்கு ஆதாரமானது நிலம். நிலத்தை ஒருவன் செம்மையாகப் பண்படுத்தினால் அதில் இட்ட வித்துக்கள் நன்கு முளைத்து செழுமையுற்று பலனைக் கொடுக்கும். ஆகையால் இக்கருத்தை உட்கொண்ட அடிகள் நிலத்தை இன்ன வகையில் முன்னம் பண்படுத்த வேண்டும் என்று ஒரு பாசுரத்தில் விளக்கிக் காட்டியிருக்கிறார். என்னே அடிகளின் கருணை!

நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற அகழ்ந்து போக்கித் தூர்வைசெய்(து)
அன்பென் பாத்தி கோலி முன்புற
மெய்யெனும் எருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சிநேர் நின்று
தடுக்குநர்க் கடங்கா திடுக்கண் செய்யும்
பட்டி அஞ்சினுக் கஞ்சியுட் சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை இளந்தளிர் காட்ட அருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப் படுத்துழிச் செம்மையின் ஓங்கி
மெய்மயிர்ப் புளகம் முகிழ்த்திட் டம்மெனக்
கண்ணீர் அரும்பிக் கடிமலர் மலர்ந்து புண்ணிய
அஞ்செழுத் தருங்காய் தோன்றி நஞ்சுபொதி



காள கண்டமுங் கண்ணொரு மூன்றுந்
தோளொரு நான்குஞ் சுடர்முகம் ஐந்தும்
பவள நிறம்பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவை அதனினும் உறுசுவை யுடைத்தாயக்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி
பையப் பையப் பழுத்துக் கைவர
எம்மனோர்கள் இனிதினி தருந்திச்
செம்மாந் திருப்பச் சிலர்இதின் வாராது
மனமெனும் புனத்தை வறும்பா ழாக்கிக்
காமக் காடு மூடித் தீமைசெய்
ஐம்புல வேடர் ஆறலைத் தொழுக
இன்பப் பேய்த்தேர் எட்டா தோடக்
கல்லா வுணர்வெனும் புல்வாய் அலமர
விச்சைவித் துதிர்த்துழி யானெனப் பெயரிய
நச்சு மாமரம் நனிமிக முளைத்துப்
பொய்யன் கவடுகள் போக்கிச் செய்யும்
பாவப் பஃறழை பரப்பிப் பூவெனக்
கொடுமை யரும்பிக் கடுமை மலர்ந்து
துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு
மரணம் பழுத்து நரகிடை வீழ்ந்து
தமக்கும் பிறர்க்கும் உதவாது
இமைப்பிற் கழியும் இயற்கையோர் உடைத்தே
(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை)

வஞ்சனை முதலான தீய எண்ணங்களை நீக்கி, நெஞ்சைப் புனிதப் படுத்தி அன்பு, வாய்மை, அருள், சாந்தம் முதலான நற் குணங்கள் வாய்க்கப்பெற்ற ஞானிகளாயுள்ளவர் உயர்கதிக்குச் செல்லும் உயர்நிலைகளையும், இவையல்லாமல் தீய எண்ணங்களால் மனதை விடயங்களிலே சுழலவிட்டு பலவாறான நோய்கள் தொடர்ந்து துன்பச் சுழியில் ஆழ்ந்து அதோகதியில் செல்லும் உயிரினங்களின் இழிநிலைகளையும் அடிகள் வகுத்துக் காட்டி யிருப்பது, மக்களின் ஏற்றத் தாழ்வுகள் நன்கு விளக்க முறுகின்றன.

அன்றியும் இராசசபைக்கு எலுமிச்சைப்பழம் என்பது நாட்டில் வழங்கிவரும் ஒரு பழமொழி. இது அரசர் ஆசிரியர் பெரியார், குருமார், விருந்தினர் குழந்தைகள் முதலானோர்

இருக்கும் இடத்துக்குச் சென்றால் ஏதேனும் இயைந்த ஒன்றைக் கொண்டு அவர்கள் உள்ளங்குளிருமாறு மரியாதை செய்ய வேண்டுமென்பதைக் குறிப்பாய் உணர்த்துகிறது. இதனை,

**கானவர் வலையில் பட்டுக் கைதப்பி ஓடும்மான்போல்**
**போனவன் வெறுங்கையோடே போகாதவண்ணம் சென்றான்**
(கைவல்ய நவநீதம்)

என்பதினலறியலாம். மேலும் மக்கள் ஆலய வழிபாட்டிற்குச் செல்லும்போது கையில் பழம் கற்பூரம் முதலானவை கொண்டு செல்வதும் இதன் கருத்தேயாகும்.

உதாரணமாக: இறைவன் ஆன்மகோடிகளுக்கு குடும்ப சகிதமாய் இருந்து காட்சியளிக்கும் இயல்பினை உணர்ந்த தவ முனிவராம் நாரதபகவான், ஒருகால் அண்ணல் இருப்பிடமாகிய கைலை வரைக்குச் செல்ல நேர்ந்தது. அதுபோது முனிவர் மதுரம் பொருந்திய இனிய கனியொன்றைக் கரத்திற் கொண்டு கண்ணுதலின் பாதமலரில் வைத்துப் பணிந்தனர். கனியைக் கண்ட கணபதி குகேசனாகிய இருசேயும்-அய்யனே கனி எனக்கு எனக்கனவென்று அரன்மடியில் தவழ்ந்து வாதாடலாயினர். இதனைக் கண்ட பரமன் உள்ளன்போடு உவகையுற்று குழந்தைகாள் நீவிர் இருவரில் எவர் முதலாக உலகை வலம் வருவீர் அன்னவர்க்கே இக்கனி உதவும் என்றார். எனவே உடனே பரமன் கட்டளையை சிரமேற்கொண்டு முருகப்பெருமான் அப்படியே வருவேன் என்று மயில்மேல் எழுந்தருள, இதனைக் கண்ட விநாயகப்பெருமான் தன் வாகனமாகிய ஆகுசத்தை நோக்க இது விரைவில் உலகை வலம்வர தாமதிக்கும் என்று எண்ணி, சத்தி சிவம் விளையாட்டாந் தாரணி, அன்னையும் பிதாவும் முன்னெறி தெய்வம் என்ற உண்மையை உணர்ந்து, அம்மை அப்பன் இருவரையும் வலம் வந்து, அத்தனே கனி தருகென, பரமன் புன்னகை புரிந்து இதேது விநோதம், உலகை வலம் வந்தனையோ? உண்மையைப் புகல் என, 'ஆம் வந்தேன். தங்கள் இருவரையன்றி உலகம் வேறுளதோ? உலகம் உம்மிடத்திற்றானே ஒடுங்கியுள்ளது. அதன் தோற்றக்கேடுகள் அனைத்தும் நின் திருவிளையாடல்தானே. என்னைச் சோதிக்கின்றீரோ?' என்று



பிள்ளை உண்மையையுரைக்க, அரன் உவகையுற்று கனியை மூத்தோனுக்கு உதவ, அறுமுகப்பரமன் அண்டம் அதிர நொடியில் உலகை வலம் வந்து தந்தையே கனியைத் தருகவென்று தாழ்ந்திறைஞ்சிநிற்க, செம்மேனி எம்மான் திருவுளமகிழ்ந்து இளையோய் கனியை முன்னமே முன்னவன் கொண்டனன் என, உடனே குகேசன் கோபாவேசனாய் உடைகோவணத்துடன் விளையோட விடும் கதிர்வேல்காரனாய் தென்திசைக்கண் சென்று திருவாவினன் குடியில் அருளாடல் செய்ய-அது கண்ட உமையும் சிவனும் பின்தொடர்ந்து, எங்கள் அன்புக்குரிய இன்பக் கனியே! முருகா வருகென, அருகணைத்து மடிமேல் வைத்து உச்சிமோந்து உள்ளன்போடு முதுகுதைவந்து குழந்தாய் சினந்தணிக. 'முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் நீ; முனிவன் தந்த இனிய கனியைக் காட்டினும் வேதாகமங்களின் முடிவில் விளைந்த இன்பக்கனி நீயேயாவாய். யாண்டும் நின்னை வணங்கும் மெய்யன்பர்கட்கு இன்னமுதாய் இன்பச் சுவையாய் கலியுகவரதனாய் காட்சிக்குரியனாய் கண்கண்ட தெய்வமாய் இருந்து கருணை பாலிப்பாய்' என இருவரும் அகமகிழ்வுற்றனர். இதனை அடியில் வரும் கவிப்படங்களில் கண்டு மகிழலாம்.

**முருகவருக அருளுததி முத்தேவருக முராரிதிரு**
**மருகவருக எமதுகுல மகவே வருக, முலைநறும்பால்**
**பருகவருக எனவெடுத்துப் பருவங்கூறி மடியினில்வைத்து**
**இருகையான் மீளவும் இறைவன் எடுப்ப அளித்தாள் உலகீன்றாள்**

**ஈசன்உருகி மடியினில் வைத்து என்றும் இளையோய்**
**அறிவுடையை**
**தேசுதருநம்வாள் நுதற்கண்மணிநீ சிறுவனே பெரியை**
**வாசநறு மென்கனியு மொருகனியோ மதுரமொழிவாயால்**
**பேசஅரியமறை ஞானப்பிள்ளை பழம்நீ எனப்புகன்றார்**
(பழநித்தலபுராணம்)

**படியில் பெருமைகள் தகவுயர் செம்பொற்**
**கிரியைத் தனிவலம் வரவர அந்தப்**
**பலனைக் கரிமுகன் வசம் அருளும்சொல் அதனாலே**
**பரன்வெட்கிடஉளம் மிகவும் வெகுண்டுஅக்**
**கனியைத் தரவிலையென் வொருசெந்தில்**
**பழநிச் சிவகிரிதனில் உறைகந்தப்—பெருமாளே** (திருப்புகழ்)

இதனலன்றே அன்றமுதல் என்றும் குன்றுதோறும் நின்றுடல் செய்யும் நின்மலமூர்த்தியாங்குகனை பழம் என்றும் கனியென்றும் பழநீ யென்றும் பெரியோர்கள் பகர்ந்து வருகின்றனர்.

இன்னும் வேதாகமங்களே குன்ருகவும் அக்குன்றின்மேல் விளங்கும் பெருமானே வேதாகமங்களின் முடிவிலே விழைந்த இன்பக்கனியாகவும், பெருமானின் கருணைப்பார்வையே கனியின் இனிய சாரமாம் சைவசித்தாந்தமெனவும், அதன் சுவையினை உண்டு களித்திருப்பதே சித்தாந்த முடிபான வீடுபேறெனவும், தெய்வத் திருவருள் கைவரப்பெற்ற மகான்கள் எடுத்துக் காட்டுகின்றனர்.

**ஓரும் வேதாந்தமென் றுச்சியிற் பழுத்த**
**ஆரா இன்பத்து அருங்கனி பிழிந்தச்**
**சாரங் கொண்ட சைவ சித்தாந்தம்** (குமரகுருபரர்)

என்பதினலறியக் கிடக்கிறது.

இவையன்றியும் காழ்த்தல், புளித்தல், கைத்தல், தித்தல் உவர்த்தல், இனித்தல் முதலிய அறுசுவைகளையுடைய கனியைக் காட்டினும் இங்கு கூறுகின்ற இன்பக்கனியானது யாண்டும் ஒரு பெற்றித்தாய், கண்டார்க்குக் கழிபேருவகையாய், உண்டார்க்கு உவட்டாத இன்னமுதாய், இனியசுவையாய் இன்ப விழைவாய் அழகு வடிவாய் ஆனந்த அற்புதக் களஞ்சியமாய், விளங்குகிறது. இதனை நன்கு உண்டனுபவித்த ஒரு பெரியார் இதன் சுவை இன்னார்க்கு இன்ன வகையில் சுவைக்கும் என்பதை அடியில்வரும் பாடலால் விளக்கிக் காண்பிக்கின்றார். என்னே அப்பாடலின் இனிமை!

**அமரர்க் கின்பாகும் அவுணர்க்கே கைப்பாம்**
**இமையப் பிடிகரத்தில் எய்தும்—சமயத்**
**தலைவனர் மோந்துகொ ளச்சாரும் போரூரில்**
**கலைவலார் ஏத்துங்கனி** (சிதம்பர சுவாமிகள்)

எனவே கலியுகவரதனும் கந்தப்பெருமான். தன்னை வணங்கும் மெய்யன்பர்கட்கு கனியாகவும், பழமாகவும், சுவையாகவும்,



சுவையிலுறும் பயனுகவும் இருந்து ஆட்கொள்ளும் கருணையின் தன்மை இக்கட்டுரையினல் ஒருவாறு அறியலாம். இஃதன்றியும் சைவசித்தாந்த கோட்பாட்டின்படி சாதன வகையில் சரியையாய் அரும்பி கிரியையாய் மலர்ந்து யோகமாய்க் காய்த்து ஞானமாய் பழுத்து கனியும் திறனை

**"விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்**
**அரும்புமலர்க் காய்கனிபோல் பராபரமே"**

என்று தாயுமான அடிகளும் விளக்குகின்றார். மற்றும்,

**அந்திப்பிறைமுடியான் அருள் இன்பக்கனி நினைவந்து**
**அண்டிப்பணி தொண்டர்க்கினி யருளும்படி நினைவாய்**
**(சிதம்பர சுவாமிகள்)**

என்க.

இற்றை ஞான்றும் தமிழ்த்தாயின் தவப்புதல்வராம் செகவீர பாண்டியனர் அவர்களும் ஒரு பாசுரத்தில் இக்கனியின் பெற்றியை விளக்கிக் காட்டுகிறார். அதனையும் கண்டு மகிழலாம்

**திங்கள் வேணியன் தந்தச் செழுங்கனி**
**மங்கை வள்ளிகை அள்ளிய மாணிக்கம்**
**எங்கள் கற்பக இன்னருள் நீழலில்**
**தங்கும் மாதவன் தாள்மலர் போற்றுவாம்.**



# ஸ்ரீ காசியில் மும்மையால் உலகாண்ட மூர்த்தி நினைவு ஆடி மாச அன்னம்பாலிப்பு

## சேமவைப்பு ரூ. 3000/-

தண்ணுர் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டு மதுரையில் வாழ்ந்த வணிகரும், திருவாலவாய்ச் சிவபெருமான் திருமேனிக்குச் சந்தனம் அரைத்துக் கொடுத்தலாகிய சீரிய தொண்டு செய்தவரும், வடுகக்கருநட மன்னன் மதுரையைக் கைக்கொண்டு சிவனடியார்களைத் துன்புறுத்திச் சந்தனம் கிடைக்காதவாறு செய்யச் சந்தனக் கட்டைக்கு மாருகத் தன் முழங்கையை உவந்து பாறையில் தேய்த்தவரும், அன்றிரவே மன்னனின் உலக வாழ்வு முடிவெய்த அமைச்சர் வேண்டுகோட்படி திருநீறே அபிடேகமாகவும் உருத்திராக்கமே அணிகலன்களாகவும், திருச்சடையே கிரீடமாகவும் கொண்டு "நிலவும் திருநீற்று நெறித்துறை நீடுவாழ உலகெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்து மன்ன" மும்மையால் உலகாண்டவரும், கி. பி. 5-ம் நூற்ருண்டின் இடைப்பகுதியில் ஆண்ட அச்சுதக் களப்பாளன் என்னும் களப்பிர அரசன் காலத்தவர் என்று வரலாற்று ஆராய்ச்சியாளரால் குறிக்கப் பெறுபவரும், ஆடிக் கார்த்திகையில் அமலன் அடி அடைந்தவரும் ஆகிய மூர்த்தி நாயனுரை நினைவு கூர்ந்து, உயிர்கட்கு இடரான கடிந்து, திருவேடம் பூண்டு, அத்திருவேட நெறிநின்று உலகு நற்பேறு அடைதற்பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இத்தருமம் நிறுவப்பெற்றது. இது 'காசியில் மும்மையால் உலகாண்ட மூர்த்தி நினைவு ஆடி மாச அன்னம்பாலிப்பு' எனப்பெயர் பெறும்.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ. 3000/- (ரூபா மூவாயிரம்) இது ஆண்டொன்றுக்கு ரூ. 100/-க்கு ரூ. 3/- வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சர்க்கார் கடன் பத்திரம்



எண். சி.எ. 141188 – ரூ. 2000/- சி.எ. 141138 – ரூ. 1000/- ஆக ரூ. 3000/- இந்நிதி நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப்பெறும்.

3. ஸ்ரீ காசியில் நம்முடைய சத்திரத்தில் நாடோறும் நடைபெற்று வருகின்ற அன்னதானத்துடனும் நம்மால் நிறுவப்பெற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் நினைவு ஆடி மாச அன்னதானத்துடனும், இம்மூலதனத்தினின்று கிடைக்கும் வட்டித் தொகையைக் கொண்டும் ஆடி மாசம் முழுவதும் ஸ்ரீ காசியில் பிராமண போஜனமும், மகேசுவர பூசையும் நடத்தப்பெறும்.

4. ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டி வருமானத்துக்கு ஏற்பவும் கால விலைக்கு ஏற்பவும் தயாரிக்கப்பெறும் திட்டஜாப்தாவின்படி இவ்வன்னம்பாலிப்பு நடைபெறும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலும் பயன்படுத்தப் பெறமாட்டாது. முதற்பொருள் அரசினரால் திரும்பியளிக்கப்பெறின் அதிக வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யப்பெறும்.

"சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி"

Tirupanandal }
13—12—1954. } (Sd) *Kasivasi Arulnandi Tambiran*



---

Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 22—12—54. as No. 71 of 1954 Book No. 4, volume 45, pages 193 and 194.

# SPEAK LESS: DO MORE

*(Sri Swami Sivananda)*

In ancient Greece there was a tribe called Spartans. They were a very brave people, very simple in their habits, who never boasted about themselves. The valour of the Spartans was a legend all around their country. When a Spartan said that he would do something, people knew that he would rather die than fail to do that.

The place where they lived was called Laconia So they were also called Lacons. One of the injunctions of their ruler was: "Be brief, clear and accurate in what you say. Do not be vague, and do not waste unnecessary words in trying to say what you do not know. If you do not know a thing, say so. If you want to do a thing, do not boast about it until you have accomplished it."

The people of Laconia were as obedient to their ruler as they were brave in the battle-field. In fact, when asked a question, a Lacon's answer would be so brief and to the point that even to this day when a statement is succinct, it is called "laconic."

Now to illustrate the point, there is a story. In the northern Greece, King Philip, father of Alexander the Great, ruled over a territory called Macedonia.

This essay from 'Wisdom Light' January 1955 has been reproduced with the kind permission of the editor.



Philip wanted to conquer the entire Greece. So he raised an army of several legions and invaded many neighbouring states. Then he sent a note to the ruler of Spartans asking him to accept his sovereignty over Laconia. At the same time, he warned that if the Spartans failed to obey, his army would destroy them.

King Philip received the answer in a short while. The letter of the Spartan ruler contained only one word. The word was "If." It meant that the Spartans were not afraid of his army, and that King Philip could carry out his threat only "if" his army was allowed to enter into Loconia by the gallant Lacons.

The moral here is precisely what the ruler of Laconia asked his citizens to abide by.

The world is full of vainglorious people. There is no dearth of gossipers. Practical people never indulge in boasting about their work. They speak less and work more. They never promise or swear but do what is expected of them. They do not spread false rumours and fabricate facts. Tale-bearing is unknown to them. Vanity never clouds their reason. They avoid confusion by speaking less and by not listening to gossips. Hence their decisions are forthright and unswerving. The ancient people of Laconia presents a fine example for emulation.

# BIRTH - DAYS

Countless lives are born and equally countless lives die. This is happening every day, nay, every minute. Birth and death relate only to the material body. The Soul of a Jeeva enters into the body even before it is born; and when a child is born, we see a physical material body inhabited by a soul. The soul monopolises the body and its use. When the body disintegrates and could no longer function, the man is said to die. The body may be weak, strong, diseased, or paralysed. It does not matter. There is a **mysterious something** which connects the soul with the body, that makes for life. When that something is lost the **soul** can no longer use the body as an instrument of expression. This is said to be death.

The soul of man is immortal. It has no birth nor death. By the inscrutable decree of God, an integrated unit of matter, styled the body, is suffused with the spirit of the soul. and that provides a wonderful medium for the expression of Divinity on earth. Matter is never lost. Its forms may change. In a sense therefore, the soul is immortal and the matter of which the body is made is also immortal. In the innumerable forms of contact between spirit and matter and in their disconnection arises the idea of birth and death. Great devotees have been seen to pray to God that

This essay from 'Amirthavasani'- Margali-has been reproduced with the kind permission of the editor.



they be redeemed from the ocean of birth and death. This arises from positing the eternal individuality of a soul liable to inhabit bodies from time to time, to ungergo the sufferings thereof and to give up at death these bodies, only to get into other new bodies. This conception of a separated existence of one's soul from the rest of creation and from God, and deliverance from it of the individual—**moksha** —does not fit in with the true higher philosophy of our religion. For, the true religious life consists in surrendering the sense of 'I' and 'Mine' and when that is surrendered, one merges into the one universal consciousness of the Divinity. The "I" and "Mine" exist only to be lost, only to be recognised as non-existent, and it is this realisation that take man beyond the region of birth and death. When the 'I' and 'Mine' are given up, the individual soul attains to its innate universal condition and the idea of birth and death gets dissolved.

It is interesting to see the birthdays of even the religious minded people being celebrated; not only this, but the birthdays of living **Sanyasis** ascetics who have given up the world. Worldly minded people celebrate their own birthdays. But in the case of great realised souls, the world celebrates their birthdays. The birth of saints is the birth of the great messages they lived for. The world prospers thereby. The birthdays of the great souls are the means by which men seek to live afresh in the great truths that were embodied in the lives of sages whose human frames have departed.

**— Thiruppugal Mani**

இறைவன்

# இறைவன் அடியும் முடியும்

திரு. வெ. சுப்ரமண்யன் அவர்கள், தமிழாசிரியர், சுவாமிமலை.

அப்பனே, ஆண்டவனே, இறைவா, அம்மையே, சக்தி தாயே என்றெல்லாம் கூவிக் கடவுளைத் தொழுகின்றோம். கூப்பாடு போட்டால் கேட்கின்றார். அவரவர் செய்த நல்வினை தீவினைக்கு ஏற்ப வாழ்வைக்கின்றார். இன்னமும் எண்ணற்கரிய எத்தனையோ திருவிளையாடல்களைக் காட்டுகின்றார். அவ்வாறு அளவிடற்கரிய செயல்களைச் செய்யும் அவர் யார்? அரன், அரி, அம்பிகையும் அல்லாவுமாய் எல்லாமாய் விளங்கும் அவர் ஒருவரே. 'அவர் தலைவர்' என்றார் கம்பர், 'ஆதிபகவன்' என்றார் வள்ளுவனார். சேக்கிழார் பெருமான் கூறுவதைக் கேட்போம்.

**" உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்**
**நிலவுலாவிய நீர்மலி வேணியன்**
**அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்**
**மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம் "**

என்று திருவாய் மலர்ந்தருளியுள்ளார். அருணகிரிநாதர்,

**" உருவன் றருவன்று உளதன்றிலதன்று**
**இருளன் றொளியன் றெனநின் றதுவே "**

என்றார். திருவருட்திரு. குமரகுருபர சுவாமிகள் அவர்கள்,

**" உருவும் அருவும் உருவருவு மாகிப்**
**பருவ வடிவம் பலவாய் "**

என்று " உள்ளங்கை நெல்லிக்கனியென " உணர்த்துகின்றார். என்றின்னோரெல்லாம் கடவுள் யாரென உணர்த்துகின்றனர்.

அவ்விறைவன் 'அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்' இருக்கின்றார் என்று கூறியவர்; பின்னும் விளங்க உரைக்கின்றார்.

**" விண்ணிறைந்த வெளியாய் என்மன வெளியிற் கலந்து**
**அறிவாம் வெளியினூடுந்**
**தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த மானபெருந்தகையே "**

" பூதாகாயம் நிறைதற்குரிய பரம ஆகாயமாகியும், என் இதய ஆகாயத்தில் சேர்ந்தும், ஞானகாயத்திலும் மிக்க தண்மையோடு



பேரமுதாய், இடையறாத இன்ப மயமாய் விளங்கும் பெருந் தகையே " என்றார் தாயுமான சுவாமிகள். பரமாகாயத்திலும், இதயாகாயத்திலும், ஞானகாயத்திலும் கலந்திருக்கின்ற இறைவன் என்றாயிற்று. நம்மாழ்வார் கூறுகின்றார்,

**" என் ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற**
**ஒன்றை யுணர்ந்தேனே "**

என்றார். ஆகவே நம் ஊனும் உயிரும், உணர்வும் அவரேயா யிற்று. " தூரிய வெளி நடுநின்ற பெரிய பொருளே ", "எல்லார்க் கும் பொதுவில் நடமிடுகின்ற சிவமே " என்று நம் திருவருட் பிரகாச இராமலிங்க சுவாமிகள் உள்ளங்கை நெல்லிக்கனியென காட்டுகின்றார். மாணிக்கவாசகப் பெருமான் " இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க " என்றார். " நினைப்பவர் மனங் கோயிலாக் கொள்பவன் " என்று அப்பர் சுவாமிகளும் கூறுகின்றவாற்றால் அடியார்கள் மனதிலேயும் இருக்கின்றார் என உணர்ந்தோமன்றோ!

" ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதி " என்று இறைவன் தன்மையைக் கூறியருளியுள்ளார் மாணிக்க வாசக சுவாமிகள். " அருட்பெருஞ் சோதி " என்றார் இராம லிங்க சுவாமிகள். மாணிக்கவாசக சுவாமிகள் தம் எதிரேகண்ட குயில் ஒன்றினை நோக்கி 'கீதம் இனிய குயிலே!' என்று அழைக் கின்றார். நீ வீணே காலத்தைக் கழிக்கின்றாய், நீ உண்மை யாகவே இனிமை தங்கிய குரலைப் பெற்றதாலாகிய பயனையடைய வேண்டுமாயின், நீ உன் இனிய குரலால் " ஆதி குணம் ஒன்று மில்லான் வரக்கூவாய்! " அவ்விறைவன் அடியும் முடியும் யாது என்னில்

**" ..............................எங்கள் பெருமான்**
**பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக்கப்பால்**
**சோதி மணிமுடி சொல்லில் சொல் இறந்து நின்றதொன்மை "**

என்று நம்மனோர்க்கு இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழை விளக்கினாராயினர்.

**கீதமினியகுயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்**
**பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக்கப்பால்**
**சோதி மணிமுடி சொல்லில் சொல் இறந்துநின்ற தொன்மை**
**ஆதிகுணம் ஒன்றுமில்லான் அந்தமிலான் வரக்கூவாய்!**

சென்னை ✓ உவமை ✓ வெண்பா ✓

# திருமயிலை உவமை வெண்பா

திருநெல்வேலி. திரு. நடலிங்க கவிராஜர் அவர்கள் பாடியது.



(மலர் 5, இதழ் 11-ன் தொடர்ச்சி)

பொன்னியங்கள் மேவுதலாற் புன்னைவளம் பாடுதலாற்
சென்னியுங்கைக் கொண்டீசன் சேருதலால்—வன்னம்
பயிலுமலைச் சாமியொரு பாலனென்னும் வாய்ப்பான்
மயிலை வலஞ்சுழியு மாம். 95

காவிரிக்கும் வியபராற் கந்தசா மிக்கிசைவாற்
பூவிரிக்கு நாகம் பொருந்துதலால்—மேவுமறை
நால்வருந்தன் மாசகல நண்ணுதலாற் றென்மயிலை
வேலிறைவ னேகரமா மே. 96

ஆலத்தால் மாண்டவரை யன்றழைக்குங் கீர்த்தியினுற்
றாலத்தார் திங்களூர் சார்தலினு—லேலக்
குழகன் வழிபடுவோர்க் குள்ளிருக்கும் வேளூர்
பழன மயிலைப் பதி. 97

தங்கோருத்திக் கின்னுகந் தான்வளைவால் நேரயர்ந்து
குங்கிலியத் தாருமகிழ் கூர்தலினு—லங்குந்
தினந்தாள் வணங்கினர்க்குச் சீர்மை தரலாற்
பனந்தாள் மயிலைப் பதி. 98

வேலவரேன் ளுளும் விரும்பும் பதியதனுற்
பாலளித்து பாலனைக்காப் பாற்றுதலாற்—கோலமிகு
சென்னைநக ருக்கடுத்த தென்பால் வளருதலா
லுள்ளுமயி லார்சேய் ஞூர். 99



அப்பனுக்கு வங்கமலை யார்காட்சி காட்டுதலால்
விப்பிரன் சொற்கேட்கும் வியப்பினுல்—மெய்ப்பா
மறையோது மாமுனிவர் வாழுந் திருமறைக்காட்
டிறைவன் மயிலையா னே. 100

வாகீசர் நற்பணிகோள் வாய்ப்பதனுற் பூவைகிளை
பாகீசை வாகமங்கள் பாடுதலா—லாகூரன்
கூர்ந்தவடி விசைந்து கொண்டால் மயிலை
பூந்துருத்தி யென்றே புகல். 101

குந்தமலி யாசானக் கும்பிட் டிறைஞ்சுதலாற்
சந்தமா ணிக்கர் தழைப்பதனு—லைந்தடக்கம்
வாயிலார்க் கின்பம் வழங்குதலா லாவுடையார்
கோயில் மயிலையென்றே கூறு. 102

நல்லபூம் பாவைதொழும் நற்பெரிய நாயகியாம்
வல்லியரு ளவர்க்கும் வாய்ப்பதனுற்—றேல்லை
மனவாக்குக் கெட்டான் மருவுகடற் சார்பாற்
புனவாயிற் றென்மயிலாப் பூர். 103

அன்பா யிலேச வளவும் பிரியாத
தன்பாத சேவை தருதலால்—இன்பாக
நேடானைக் கொண்டாடி நேசித்து நிற்பதனுல்
ஆடானை யான்மயிலை யான். 104

பரிதிகுல ராமன் பணிந்துசெலும் பண்பா
லொருசிவ ஞகங்கோ ளூர்த்தா—லிருவினையுந்
தீர்த்துமட வார்பவமுந் தீர்ப்பதாற் சேதுநகர்
கூர்த்தமயி லாபுரிக்கோப் பாம் 105

மானிலத்து முந்து மகிமைப் பதியெனலாற்
றுனடங் கற்றேருஞ் சார்வதனுற்—பான்மைமிகு
மங்கலநீர் வாய்ப்பால் வளருந் தரகோச
மங்கைமயி லாபுரிநேர் வாம். 106

(தொடரும்)

**1130-ம்ஞு மார்கழி மாதத்தில்**

## கலைக்கோவிலில் வரப் பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 3539 | முருகவேள் பன்னிரு திருமுறை (தொகுதி-4 பகுதி-10) பாடல்கள் 976-995) | ராவ்பகதூர் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A. |
| 3540 | சங்க காலச் சான்ருேர்கள் | ந. சஞ்சீவி, எம். ஏ. |
| 3541 | திருச்சிக்கல் திருப்பதிகம் | தருமபுர ஆதீனம் |
| 3542 | ஞானசாத்திரங்கள் | ஷை |
| 3543 | மாயூரம் நகராட்சி பொருட்காட்சி மலர்-1954 | மாயூரம் நகராட்சி 'துலா உற்சவப் பொருட் காட்சி நிர்வாகிகள்' |
| 3544 | நல்லுரைக்கோவை (இரண்டாம் பாகம்) | மகாமகோபாத்தியாயதாக்ஷிணாத்ய கலாநிதி |
| 3545 | நினைவுமஞ்சரி (முதற்பாகம்) | டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் |
| 3546 & 3547 | மாயூரம் தாலுகா திருவிடைக்கழி ஸ்தல புராணம் | திருவிடைக்கழி அஷ்டபந்தன மகாகும்பாபிஷேக வெளியீடு |
| 3548 | மெய்கண்ட சாத்திரம் போற்றிப்பஃறொடை முதலியன-பழைய உரையுடன் | திருவாவடுதுறையாதீனம் |
| 3549 | சீகாழிச் சிற்றம்பல நாடிகள் கலித்துறை முதலியன | ஷை |
| 3550 | உண்மை விளக்கம் முதலியன. | ஷை |
| 3551 | A New approach to Tiruvasagam | Mrs. Ratha Navaratnam M. A. Litt. |
| 3552 | பழந்தமிழரும் முருகன் முக்கண்ணன் வணக்கமும் | டாக்டர். தி. இரா. அண்ணாமலைப்பிள்ளை |
| 3553 | திருமுருகாற்றுப்படை (முருக வழிபாடு) | S. கற்பகவல்லி M. A., பதிப்பாசிரியர் (தொடரும்) |

Page number not counted

# திருப்பனந்தாள்
# ஸ்ரீ காசிமடம் வெளியீடுகள்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | 0 | 1 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு | 6 | 0 |
| | டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் | 3 | 0 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | 2 | 8 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் | 1 | 0 |
| 5 | திருநாவுக்கரசர் தேவாரம் | 1 | 0 |
| 6 | சுந்தரர் தேவாரம் | 0 | 6 |
| 7 | திருவாசகம் | 2 | 0 |
| 8 | திருக்கோவையார் | | |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு | 0 | 9 |
| | | 1 | 8 |
| 10 | திருமந்திரம் | 1 | 4 |
| 11 | பதினோராந்திருமுறை | | |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (மறுபதிப்பு அச்சில்) | 0 | 8 |
| 13 | திருக்கைலாய ஞானவுலா உரையுடன் | 2 | 8 |
| 14 | பெரிய புராணம் | 0 | 6 |
| 15 | அகத்தியர் தேவாரத்திரட்டு | 3 | 0 |
| 16 | திருவிளையாடற் புராணம் | 1 | 4 |
| 17 | தாயுமானவர் சுவாமிகள் பாடல் | 1 | 12 |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் | 2 | 12 |
| 19 | கந்தபுராணம்-முதல் மூன்று காண்டங்கள் | 2 | 0 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் | 1 | 8 |
| 21 | ,, தக்ஷகாண்டம் | 2 | 8 |
| 22 | கந்தபுராண வசனம் | 0 | 4 |
| 23 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | 0 | 2 |
| 24 | கந்தரனுபூதி | | |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி | 0 | 6 |
| | மொழிபெயர்ப்புக்களுடன் | 0 | 1 |
| 26 | கந்தர் கலிவெண்பா மூலம் மட்டும் | | |
| 27 | கந்தர் கலிவெண்பா, திரு. பட்டுச்சாமி ஓதுவார் மறுபதிப்பு அச்சில் | | |
| 28 | நீதிநெறிவிளக்கம்—ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் | 0 | 8 |
| 29 | சகலகலாவல்லிமாலை—ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | 0 | 1 |

146

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 30 | அபிராமி அந்தாதி கி. வா. ஜ. குறிப்புரையுடன் (மறுபதிப்பு அச்சில்) | | |
| 31 | சிவஞான சித்தியார், ஆங்கிலம், ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் (மறுபதிப்பு அச்சில்) | | |
| 32 | ஷை ஹிந்தி மட்டும் .... | 1 | 0 |
| 33 | திருக்குறள்—அறத்துப்பால் ஹிந்தி மொழிபெயர்ப்பு | 1 | 8 |
| 34 | திருக்குறள்—பொருட்பால் ,, .... | 2 | 8 |
| 35 | திருக்குறள்—காமத்துப்பால் ,, .... | 1 | 0 |
| | ஷை 33, 34, 35 திருக்குறள் 3 புத்தகமும் சேர்த்து வாங்கினல் கிரயம் .... | 4 | 0 |
| 36 | திருக்குறள் தமிழ்மறை K. M. வேங்கடராமையா M. A., B. O. L. அவர்கள் குறிப்புரையுடன் .... | 0 | 12 |
| 37 | திருக்குறள்—பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் .... | 0 | 2 |
| 38 | முதுமொழி மேல் வைப்பு .... | 0 | 12 |
| 39 | திருவுசாத்தானக் கல்வெழுத்துக்கள் .... | 0 | 6 |
| 40 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா—மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ்—மதுரைக் கலம்பகம்—நீதிநெறி விளக்கம்—மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனுட்சியம்மை குறம் .... | 2 | 12 |
| 41 | திருவாரூர் நான்மணிமாலை - முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் .... | 1 | 4 |
| 42 | சிதம்பர மும்மணிக் கோவை-சிதம்பரச் செய்யுட்கோவை-தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை .... | 1 | 0 |
| 43 | பண்டார மும்மணிக் கோவை - காசிக் கலம்பகம்-சகலகலாவல்லி மாலை .... | 1 | 0 |
| 44 | சிதம்பரச் செய்யுட்கோவை .... | 0 | 12 |
| 45 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் .... | 1 | 0 |
| 46 | தமிழிசைப்பாக்கள் .... | 0 | 8 |
| 47 | பெரியபுராணம் உரைநடை ... | 2 | 0 |

கிடைக்குமிடங்கள் :-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்டம்.
2. தியாகராச விலாஸ், திருவல்லிக்கேணி, சென்னை.

குறிப்பு:— ஷை விற்பனைத் தொகை "குமரகுருபரன்" பத்திரிகையைச் சாரும்.

அச்சிட்டது :— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்—55

